اپنا دل سنواریئے (ٹمل)

# உள்ளங்களை சீர்படுத்திக் கொள்ளுங்கள்

حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی، مجددی
دامت برکاتہم

ஹள்ரத் மௌலானா பீர்
**துல் ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**
நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்



# اپنا دل سنواریئے (تمل)

# உள்ளங்களை சீர்படுத்திக் கொள்ளுங்கள்

**அந்நாளில் செல்வமும், பிள்ளைகளும் எந்த பயனுமளிக்கமாட்டா. எவரொருவர் பரிசுத்தமான உள்ளத்தை அல்லாஹ்விடம் கொண்டு வருகிறாரோ அவர் (கண்ணியம் அடைவார்.) அல்குர்ஆன் 26: 88, 89.**

**நிச்சயமாக ஒவ்வொரு ஆதமுடைய மகனின் உடலில் ஒரு சதைத் துண்டு உள்ளது. அது சீர்பெறாவிட்டால் முழு உடலின் அனைத்து செயல்பாடுகளும் சீர்கெட்டுவிடும். அது சீராகிவிட்டால் முழு உடலின் செயல்பாடுகளும் சீராகிவிடும். (அல்ஹதீஸ்)**


**சர்வதேச அளவில் மிகப் பெரிய சீர்திருத்தப் பணி செய்து வரும் ஆன்மீக சொற்பொழிவாளர்:**

**ஹள்ரத் மௌலானா பீர்**

## துல் ஃபிகார் அஹ்மது ஸாஹிப்

**நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹூம்**

தமிழாக்கம் :

**மௌலவி சைய்யிது முஹம்மது பாஷா**

ரஷாதி, காஸிமி



வெளியீடு

**மௌலானா ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தீ**

**செல் : 94444 53232**

## பொருளடக்கம்

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

## மதிப்புரை

அல்லாஹ்வின் கிருபையால், சர்வதேச அளவில் மாபெரும் சீர்திருத்தப் பணி செய்து வரும் பெரியார்களில் ஹஸ்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் தாமத் பரகாதுஹும் அவர்கள் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியவர்கள். பாவத்தின் காரணத்தினால் உள்ளம் இருளடைந்த பல மனிதர்கள், ஹஸ்ரத் அவர்களின் சொற்பொழிவின் மூலம் தனதுள்ளத்தில் சீர்திருத்தத்தை ஏற்படுத்தி இன்பமான, பரிசுத்தமான வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் ஏராளம். பொதுமக்கள் மட்டுமின்றி உலமாக்கள் மற்றும் ஸாலிஹீன்கள் என அனைத்துத் தரப்பினரும் ஹஸ்ரத் அவர்கள் மூலம் பயனடைந்துள்ளனர்.

**உள்ளங்களை சீர்படுத்திக் கொள்ளுங்கள்** என்ற தலைப்பில் ஹஸ்ரத் அவர்கள் ஆற்றிய அற்புதமான சொற்பொழிவை மௌலானா சைய்யிது முஹம்மது பாஷா ரஷாதி, காஸிமி ஹஸ்ரத் அவர்கள் மிக அழகிய முறையில் தமிழாக்கம் செய்துள்ளார்கள். அல்லாஹ் இதனை ஏற்றுக் கொள்வானாக! ஆமீன்.

**அன்புடன்**

**மௌலானா ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தி, பெங்களூரி.**

# மொழிபெயர்ப்பாளன் உரை

اَلْحَمْدُ لِلّٰهِ وَكَفٰى وَسَلَامٌ عَلٰى عِبَادِهِ الَّذِيْنَ اصْطَفٰى اَمَّا بَعْدُ

இன்றைய நவ நாகரீகத்தில் அனைத்துலக மாந்தர்களையும் ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கும் மிக அற்புதமான இயந்திரம், "மனித உள்ளம்" தான் எனக் கூறினால், அது மிகையாகாது. ஏனெனில், எந்த சிந்தனைகள் உள்ளத்தினுள் உருவாகின்றதோ அவை செயல் வடிவம் பெற்று, மனித உடற்பாகங்களான கண், காது, நாவு, கரம் மற்றும் பாதம் வாயிலாக வெளியாகின்றன. இந்த உள்ளம் தூய்மை பெற்றிருந்தால் அதிலிருந்து வெளியாகும் செயல்கள் யாவும் தூய்மையானவையாக இருக்கும். எனவே அல்லாஹு தஆலா மற்றும், அவனது சத்திய தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களால் அருளப்பட்ட ஏவல், விலக்கல்களை ஏற்று நடத்தல், சங்கைக்குரிய ஸஹாபாப்பெருமக்கள், தாபியீன்கள், தபஉ தாபியீன்கள் மற்றும் நமது முன்னோர்களான கண்ணியத்திற்குரிய இமாம்களின் அறவுரைகளைக் கேட்டு நடத்தல், பணிவு, பொறுமை, இரக்கம், நல்லிணக்கம், ஒற்றுமை, பிறர் நலன் பேணுதல், பிறர் உரிமைகளை பாதுகாத்தல் போன்றவை அந்த உளத்தூய்மையின் வெளிப்பாடு எனலாம். நற்சீலர்களின் வாழ்வில் அனுதினமும் ஒவ்வொரு நொடிக்கும் தேவையான நற்குணங்கள், தெளிந்த நீரூற்றைப் போன்று வெளியாகிக் கொண்டே இருக்கும்.

உள்ளங்கள் உலக ஆசாபாசங்களில் மோகங்கொண்டு, கறைபடிந்திருந்தால் அதிலிருந்து வெளியாகும் செயல்கள் மாசுபடிந்ததாக, தூய்மையற்றதாக, அறுவருக்கத்தக்கவையாக மேலும் அனைவராலும் வெறுக்கத் தகுந்தவையாக

அமைந்துவிடும். மேலும் அந்த துர்குணங்கள் கேவலம், அவமானம், இழிநிலை ஆகியவற்றின் அடிபாதாளத்தில் தள்ளக்கூடிய வையாகும். அல்லாஹு தஆலா மற்றும் அவனது சத்திய தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களால் அருளப்பட்ட ஏவல், விலக்கல்களை புற முதுகில் போட்டு விட்டு தான்தோன்றித்தனமாக வாழ்வது, சங்கைக்குரிய ஸஹாபாக்கள், தாபியீன்கள், தபஉ தாபியீன்கள் மற்றும் நமது முன்னோர்களான கண்ணியத்திற்குரிய இமாம்களின் அறிவுரைகளை அவமதிப்பது, கர்வம் மற்றும் ஆணவம், அநியாயம் செய்வது, பிளவை உண்டாக்குவது மற்றும் நட்பை முறித்தல், பிறரை நேவினை செய்தல், பிறரின் உரிமைகளை பாழாக்குதல் போன்றவை துர்குணங்களில் அடங்கும். உள்ளத்தின் மீது உழைப்பு செய்யாமல் அதை சீரழியச் செய்தவரின் வாழ்வில் இத்தீய குணங்கள், வெளியாகிக் கொண்டே இருக்கும்.

எனவேதான் அல்லாஹு தஆலா தனது திருக்குர்ஆனில்,

يَوْمَ لَا يَنْفَعُ مَالٌ وَّلَا بَنُوْنَ اِلَّا مَنْ اَتَى اللّٰهَ بِقَلْبٍ سَلِيْمٍ

பரிசுத்தமான உள்ளத்தை அல்லாஹ்விடம் கொண்டு வந்தவரைத் தவிர மறுமை நாளில் (யாருடைய) செல்வமும், மக்களும் பலனளிக்கமாட்டார்கள் எனக் கூறிக் காட்டுகின்றான். ஆகவே தான் இறுதி இறைத் தூதர் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள்,

اِنَّ فِيْ جَسَدِ كُلِّ بَنِيْ اٰدَمَ لَمُضْغَةً اِذَا فَسَدَتْ فَسَدَ الْجَسَدُ كُلُّهٗ وَاِذَا صَلُحَتْ صَلُحَ الْجَسَدُ كُلُّهٗ اَلَا وَهِيَ الْقَلْبُ

"நிச்சயமாக ஒவ்வொரு ஆதமுடைய மகனின் உடலில் ஒரு சதைத்துண்டு உள்ளது. அது சீர்கெட்டுவிட்டால், முழு உடலின்

செயல்பாடுகளும் சீர்கெட்டுவிடும். அது சீராகி விட்டால் முழு உடலின் செயல்பாடுகளும் சீராகிவிடும். அறிந்து கொள்ளுங்கள் அது தான் உள்ளமாகும்" என திருவாய் மலர்ந்து, மாபெரும் ஒரு உண்மையை எடுத்தருளியுள்ளார்கள். மேலும், இதன் வாயிலாக அனைத்துலக மாந்தர்களை எல்லாவற்றிற்கும் முதன்மையாக தத்தமது உள்ளத்தை செம்மைப்படுத்தி சீர்பெறச்செய்ய வேண்டும் என "புனித அழைப்பை" விடுக்கின்றார்கள்.

இந்த நவீன காலத்தில் பற்பல அதிநவீனங்களை செய்து காட்டி பிரம்மிக்க வைக்கும் இம்மனிதனின் உழைப்பானது, தான் விட்டுச்செல்லும் அல்லது தன்னை விட்டு விலகிச் செல்லக்கூடிய அழியும் பொருட்களின் மீது மட்டுமே நடைபெற்று வருகின்றது. இப்பொருட்கள் எந்நேரத்திலும் அவனை விட்டு தூரமாகி விடக்கூடும்.

மாறாக, தனதுள்ளத்தின் மீது பாடுபட்டு அதனை தூய்மையடையச் செய்து விட்டால், அது அவனை விட்டு என்றென்றும் அகலாது. இவ்வுலக வாழ்வில் உளத்தூய்மையுடன் இருப்பது, மனிதனை இமயமலை சிறப்பிற்கும், புகழாணியின் உச்சியில் சேர்ப்பித்துவிடும். மறுமையிலோ எந்த கண்ணும் கண்டிராத, எந்த செவியும் கேட்டிராத, எந்த சிந்தனையிலும் உதித்திடாத அளவிற்கு நிரந்தர சுக போகத்தின் சிகரத்தில் கொண்டு போய் சேர்த்து விடும். ஆதலால் தான் கண்ணியத்திற்குரிய நமது முன்னோர்கள் நீர், நெருப்பு, மண், காற்றின் மீது உழைப்பு செய்வதற்கு பதிலாக, அல்லாஹு தஆலாவும் அவனது சத்திய தூதரின் அறவுரைகளுக்கேற்ப தனது உள்ளத்தின் மீது உழைப்பு செய்து மாபெரும் அழியாத வெற்றிகளை ஈட்டி, அழியா சரித்திரத்தில் இடம் பெற்றுள்ளார்கள்.

உங்களது கரங்களில் தவழ்ந்து கொண்டிருக்கும்

இச்சின்னஞ்சிறு நூல், நமது ஆன்மீக குருநாதர் ஹழ்ரத் மௌலானா அல்ஹாஜ் பீர் துல்ஃபிகார் அஹ்மத் சாஹிப் நக்ஷ்பந்தீ, முஜத்திதீ (தாமத் பரகாதுஹும்) அவர்கள், 13-01-2001 அன்று குஜராத் மாகாணம் பரோட்ஜ் மாவட்டத்தில் இருக்கும் ஜம்பூஸர் எனும் சிற்றூரில் தாருல் குர்ஆன் மத்ரஸாவில் சனிக்கிழமை இஷாத் தொழுகைக்குப் பின் ஆற்றிய ஆன்மீகத்தை வளப்படுத்தும் சொற்பொழிவாகும். இதில் உள்ளத்தை சுத்திகரித்து, அலங்கரிப்பதற்கான அறவுரைகளை திருக்குர்ஆன், ஹதீஸ் மற்றும் கண்ணியத்திற்குரிய முன்னோர்களின் சம்பவங்களைக் கூறி, ஆர்வமூட்டியும், அவற்றை அடைவதற்கான வழி முறைகளையும் தமக்கே உரித்தான பாணியில் பல உதாரணங்களை எடுத்துரைத்து இரத்தினச் சுருக்கமாக விவரித்துள்ளார்கள்.

இதைப் போன்று 12 ஆன்மீக சொற்பொழிவுகளை அம்மகான் அவர்கள், இந்திய குஜராத் மாகாணத்தில் ஒரு வார பயணத்தின் பொழுது ஆற்றியுள்ளார்கள். அவற்றை எனது குருநாதர் ஹழ்ரத் அக்தஸ் மௌலானா ஸலாஹுத்தீன் சைஃபீ (தாமத் பரகாதுஹும்)அவர்கள், அரும் பாடுபட்டு دوائے دل – தவாயே தில் (உள்ளத்தின் அருமருந்து) எனும் பெயரில் அவற்றை உருது மொழியில் தொகுத்து வெளியிட்டுள்ளார்கள். அந்நூலிலுள்ள ஆன்மீகம் நிறைந்த சொற்பொழிவுகளை தமிழ் பேசும் உலகிற்கு வழங்கினால் எவ்வளவு நன்றாக இருக்கும்! அதனை வாசித்து தனது வாழ்வை சீர் செய்து கொண்டு நற்செயல்கள் புரியும் நற்சீலர்களின் நன்மைகள் இம்மையிலும், மறுமையிலும் அடியேனை சிறப்பிக்குமே என்ற பேராவலில் எனது குருநாதரிடத்தில் அதனை தமிழாக்கம் செய்ய இந்த எளியவன் அனுமதி கேட்டேன். உடனே ஹழ்ரத் அக்தஸ் அவர்கள் "உள்ளத்தின் அருமருந்து" நூலிலுள்ள சொற்பொழிவுகளை தமிழாக்கம் செய்ய அனுமதி வழங்கியதோடு, இந்நூல் அல்லாஹு

தஆலாவிடம் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கும், பொதுவாக இதனை வாசிக்கும் அன்பர்கள் அனைவருக்கும், குறிப்பாக நக்ஷபந்திய்யா, முஜத்திதிய்யா தொடரில் ஆன்மீக பலன்களை பெற்று வரும் நற்சீலர்களுக்கும் மறுமை நாள் வரை நேர்வழி காட்டுவதற்கும், தமது உள்ளங்களை சீர்படுத்தி, அலங்கரித்துக் கொள்வதற்கும் எல்லாம் வல்ல அல்லாஹு தஆலாவிடம் துஆவும் செய்தார்கள்.

உள்ளத்தின் அருமருந்து நூலில் இருக்கும் 12 சொற்பொழிவுகளில் முதலாம் சொற்பொழிவான உள்ளங்களை சீர்படுத்திக் கொள்ளுங்கள்" எனும் ஆன்மீக சொற்பொழிவு தான் இந்நூல் வடிவத்தில் காட்சியளிக்கின்றது. மற்ற 11 சொற்பொழிவுகளையும் தமிழாக்கம் செய்வதற்கான சக்தியும், தகுதியும் வழங்க அல்லாஹு தஆலாவிடத்தில் துஆ செய்யுமாறு உங்களிடத்தில் பணிவன்புடன் கேட்டுக் கொள்கின்றேன்.

இச்சொற்பொழிவை தமிழாக்கம் செய்ய ஆர்வ மூட்டி தூண்டுகோலாக இருந்து, பலவழிகளில் இந்நூலை வெளிக்கொண்டுவருவதற்கு உறுதுணையாக இருந்துவருகின்ற, தமிழ் நாட்டின் தாய்க் கல்லூரியாம் வேலூர், அல்–பாகியாத்துஸ் ஸாலிஹாத் அரபிக் கல்லூரியின் துணை முதல்வரும், பேராசிரியரும், தமிழ் நாட்டின் முதல் கலீஃபாவாகிய ஹழ்ரத் மௌலானா முஃப்தி ஷகீல் அஹ்மத் நக்ஷபத்தீ அவர்களுக்கு எனது ஆழிய நன்றியினைக் கூறிக் கொண்டு, மேலும் இந்நூலை சரிபார்த்து, ஆச்சிட்டு வெளிவருவதில் உறுதுணையாக இருந்த அனைவருக்கும் நன்றியனைக் கூறிக் கொண்டு, இவ்வுரையை நிறைவு செய்கின்றேன்.

**இஸ்லாமிய ஊழியன்**

**சைய்யிது முஹம்மது பாஷா**

ரஷாதி, காஸிமி, அபூதாபி

بسم الله الرحمن الرحيم

# உள்ளங்களை சீர்படுத்திக் கொள்ளுங்கள்

اَلْحَمْدُ لِلّٰهِ وَكَفٰى وَسَلَامٌ عَلٰى عِبَادِهِ الَّذِيْنَ اصْطَفٰى اَمَّا بَعْدُ

اَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ ، بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

يَوْمَ لَا يَنْفَعُ مَالٌ وَّلَا بَنُوْنَ اِلَّا مَنْ اَتَى اللّٰهَ بِقَلْبٍ سَلِيْمٍ

فَقَالَ رَسُوْلُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ: اِنَّ فِىْ جَسَدِ كُلِّ بَنِىْ اٰدَمَ لَمُضْغَةً اِذَا فَسَدَتْ فَسَدَ الْجَسَدُ كُلُّهٗ وَاِذَا صَلُحَتْ صَلُحَ الْجَسَدُ كُلُّهٗ اَلَا وَهِيَ الْقَلْبُ

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ وَسَلَامٌ عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

மதிப்பிற்குரிய பெரியோர்களே! பாசமிகு சகோதரர்களே! அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றார்கள்: اِنَّ فِىْ جَسَدِ بَنِىْ اٰدَمَ لَمُضْغَةً

**நிச்சயமாக ஆதமுடைய மகனின் உடலில் ஒரு சதைத் துண்டு உள்ளது.**

إِذَا فَسَدَتْ فَسَدَ الْجَسَدُ كُلُّهُ

**அது சீர்கெட்டு விட்டால், முழு உடலின் செயல்பாடுகள் அனைத்தும் சீர்கெட்டுவிடும்.**

وَإِذَا صَلُحَتْ صَلُحَ الْجَسَدُ كُلُّهُ

**அது சீராகிவிட்டால், முழு உடலின் செயல்கள் யாவும் சீராகிவிடும்.**

## மறுமை நாளில் பலன் தரும் பொருள்

ஓதிக் காட்டப்பட்ட திருக்குர்ஆன் வசனத்தில் அல்லாஹு தஆலா கூறுகின்றான். மறுமை நாளில் செல்வமோ, குழந்தைகளோ பயனளிக்க மாட்டார்கள். ஆனால், எவர் சீர்படுத்தப்பட்ட உள்ளத்தைக் கொண்டு வருவாரோ, அவருக்கு அது பயனளிக்கும். இத்திருவசனத்தில் இரண்டு விஷயங்களைப் பற்றி மறுப்பு கொடுக்கப்பட்டுள்ளது. ஒன்று, செல்லம். மற்றொன்று, குழந்தைகள். பொதுவாக மனிதன் இவ்வுலகத்தில் இவ்விரண்டு விஷயங்களில் ஏமாறுகின்றான். "செல்வமிருந்தால் சிங்கத்தின் பாலையும் விலைக்கு வாங்கிவிட முடியும். பணம் இருந்தால் எல்லாக் காரியங்களும் சீராக நடைபெறும் என்று மனிதன் நினைக்கின்றான். உண்மையில் இது மாபெரும் தவறான எண்ணமாகும். செல்வத்தினால் மனிதனின் சில காரியங்கள், வேண்டுமானால் நிறைவேறலாம். ஆனால், அனைத்து காரியங்களும் நிறைவேறுவதில்லை. செல்வத்தின் மூலம் இவ்வுலகிலேயே நிறைய காரியங்கள் நிறைவேறுவதில்லை எனும் போது மறுமையில் இச்செல்வத்தின் மூலம் எக்காரியமும் நிறைவேறாது.

நீங்களே சற்று கூர்ந்து கவனித்துப் பாருங்கள்! மனிதன் செல்வத்தினால் மூக்குக் கண்ணாடியை வாங்க முடியும். ஆனால்,

கண் பார்வையை வாங்க முடியாது. செல்வத்தினால் கண் கவரும் ஆடையை வாங்கலாம். ஆனால், அழகை வாங்க முடியாது. செல்வத்தினால் மென்மையான மெத்தையை வாங்கலாம். ஆனால், இனிமையான தூக்கத்தை வாங்க முடியாது. செல்வத்தினால் மருந்தை வாங்க முடியும். ஆனால், ஆரோக்கியத்தை வாங்க முடியாது. செல்வத்தினால் முடியை கருமையாக்கும் பொருளை வாங்கி விடலாம். ஆனால், வாலிபத்தை வாங்க முடியாது. செல்வத்தினால் மனிதர்களை மகிழ்விக்க முடியும். ஆனால் உள்ளத்தின் பாசத்தை விலைக்கு வாங்க இயலாது. செல்வத்தைக் கொண்டு மனிதன் புத்தகத்தை விலைக்கு வாங்க முடியும். ஆனால் கல்வியை விலைக்கு வாங்க முடியாது.

செல்வத்தின் மூலம் எல்லாக் காரியங்களையும் இவ்வுலகிலேயே சாதிக்க முடியாது என்றிருக்கு போது மறுமையில் இச்செல்வங்களைக் கொண்டு எக்காரியத்தையும் சாதிக்க முடியாது என்பதை நம்மால் தெரிந்து கொள்ள முடிகிறது. அப்படியானால் , அங்கு எது பயனளிக்கும்?

إِلَّا مَنْ أَتَى اللَّهَ بِقَلْبٍ سَلِيمٍ

**எவர் சீர்படுத்தப்பட்ட உள்ளத்தைக் கொண்டுவருவாரோ (அவருக்கு அது பயனளிக்கும்.)** (அல்குர்ஆன்–26:89)

அதாவது அல்லாஹ் அல்லாதவற்றின் அன்பில், பாசத்தில் பரிபோகாத பரிசுத்தமான இதயம்.

மற்றவைகளின் பாசம் இதயத்தில் இடம் பிடிக்கும் போது இதயம், இருளடைந்து கறை படிந்து விடுகிறது.

உலக ஆசையினால் உள்ளம் இருளடைகிறது. அல்லாஹ்வின் அன்பால் உள்ளம் பிரகாசமடைகிறது.

மனிதன் ஒரு பாவம் செய்துவிடும் போது, அவன் உள்ளத்தில் ஒரு கரும்புள்ளி ஏற்படுகிறது. பிறகு அவன் அப்பாவத்தை விட்டு அல்லாஹு தஆலாவிடம் உண்மையான முறையில் தவ்பா-பாவமீட்சி பெற்றுவிட்டால் அக்கரும்புள்ளி மறைந்து உள்ளம் தூய்மையடைந்து விடுகிறது. ஆனால் பாவ மன்னிப்பு கேட்காமல் மீண்டும் பாவம் செய்தால் மேலும் ஒரு கரும்புள்ளி உள்ளத்தில் அதிகரிக்கிறது. இவ்வாறாக பாவத்திற்கு மேல் பாவம் செய்ய செய்ய அக்கரும்புள்ளிகள் அதிகமாகி, இறுதியில் உள்ளம் முழுவதும் கறுத்துவிடுகிறது.

## உள்ளம் ஒரு விசித்திரமான ஊராகும்

மனிதன் தனதுள்ளத்தை சுத்தப்படுத்தி, அலங்கரிக்கும் வேலையை செய்யத்துவங்கும் போதுதான் இவ்வுள்ளத்தில் இன்னும் எவ்வளவு உழைப்பு செய்ய வேண்டியதுள்ளது என்பது தெரிய வரும். மனித உள்ளம் சீர்பெறுவதென்பது சுலபமான காரியமில்லை. இவ்வுழைப்பில் நீண்டகாலம் சென்ற பின்னர் தான் மனித உள்ளம் சீர்பெறுகின்றது. இக்கருத்தை ஒரு உருது கவிஞர்,

ویرانے بھی دیکھے ہیں آبادی بھی دیکھی ہے      جو اجڑے تو پھر نہ بسے دل وہ نرالی بستی ہے

دل کا اجڑنا سہل سہی بسنا کھیل نہیں بھائی      بستی بسنا کھیل نہیں بستی بستے بستے بستی ہے

[உயிரினங்கள் எதுவுமில்லாமல் பாழடைந்து,] வரட்சியாக காட்சியளிக்கும் நகரையும் பார்த்துள்ளோம்.

எண்ணற்ற படைப்பினங்களால் செழுமை பெற்று காட்சியளிக்கும் நகரையும் பார்த்துள்ளோம்.

ஒரு முறை பாழடைந்து விட்டால், பின்னர் செழிப்படையாத விசித்திரமான ஊராகும் இந்த உள்ளம்.

சகோதரரே! உள்ளம் பாழடைந்து விடுவது மிகவும் சுலபமாக இருக்கலாம். ஆனால், அது [பண்பட்டு] சீர் பெறுவதென்பது விளையாட்டல்ல.

நகரம் செழுமைப் பெற்று சீராகுவது விளையாட்டல்ல; அது நீண்ட காலம் கடுமையான உழைப்பிற்குப் பின்னர் தான் நகரமாக மாறுகின்றது.

பொதுவாக கிராமங்கள் செழுமைப் பெற்று பொலிவுடன் காட்சியளிப்பது சுலபமானதல்ல. பல வருடங்கள் கழிந்து விடுகின்றன. பின்னர்தான் அவை செழுமை பெறுகின்றன. அதே போன்று (உள்ளத்தைப் பரிசுத்தப்படுத்தும் உழைப்பில்) பல வருடங்கள் கழிந்த பின்னர் தான் உள்ளம் சீர் பெறுகின்றது. (உண்மை என்னவெனில்) மனித உள்ளம் அதிவிரைவில் சீரழிந்து விடுகின்றது. ஆனால், மிகப் பெரும் சிரமங்களுக்குப் பின்னர்தான், அது பண்படுகின்றது. எனவே, அதனை செம்மைப் படுத்துவதற்காக உழைப்பது அவசியமாகும்.

**ஒரு கவிஞர் கூறுகிறார்:**

مصحفی ہم تو سمجھتے تھے کہ ہوگا کوئی زخم     تیرے دل میں تو بہت کام رفو کا نکلا

குர்ஆனை ஓதுபவனே! உன் இதயம் சிறிது காயப்பட்டிருக்கிறதென்று நாம் நினைத்தோம்.

ஆனால், உனது அநேக செயல்பாடுகள் இன்னும் சீர்திருத்தம் பெற வேண்டியதுள்ளது என தெரிய வந்தது.

ஆதலால் நீங்கள் அல்லாஹு தஆலாவிடம் நெருக்கம் பெற்ற நல்லடியாரின் கண்காணிப்பில் இருந்தவாறு உள்ளத்தின் மீது தையல் போட ஆரம்பிப்பீர்களோ அப்பொழுதுதான் எங்கெங்கெல்லாம் காயங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை தெரிந்து கொள்வீர்கள்.

மற்றொரு கவிஞர் இந்நிலையைப் படம்பிடித்துக் காண்பிக்கிறார் :

دل داغ داغ شد بنبہ کجی کجی نہم

உள்ளம் முழுவதும் பல காயங்கள் ஏற்பட்டுள்ளன. நான் எங்கெங்கு தான் அதற்கு மருந்திடுவேன்.

## உள்ளம் அல்லாஹ்வின் பேரொளிகள் வந்து செல்லுமிடமாகும்.

அடியானின் உள்ளம் அல்லாஹ்வின் அர்ஷாகும். இது எவ்வாறு என்பதை சற்று கவனியுங்கள்! நாம் கஃபாவை – பைத்துல்லாஹ் (அல்லாஹ்வின் வீடு) என்று கூறுகின்றோம். இதன் கருத்து கஃபாவில் அல்லாஹ் வசிக்கின்றான் என்பதில்லையே ! (அல்லாஹ் பாதுகாப்பானாக!)

மாறாக, அங்கு அல்லாஹு தஆலாவின் நேரடியான பேரொளிகள் இறங்கிக்கொண்டே இருக்கின்றன. இதனால்தான் கஃபாவை பைத்துல்லாஹ் எனக் கூறுகின்றோம். இதைப் போன்றுதான் ஒரு முஃமின், தனதுள்ளத்தை சீராக்கினால் அவனது உள்ளமும் அல்லாஹு தஆலாவின் பேரொளிகள் வந்து செல்லுமிடமாக மாறிவிடுகின்றது.

இக்கருத்தை ஒரு கவிஞர்,

دل بدست آور کہ حج اکبراست    از ہزاراں کعبہ یک دل بہتراست

"உள்ளம் பரிசுத்தமடைந்து விடுவதுதான் ஹஜ்ஜே அக்பராகும்.

[முழுமையாக அலங்காரம் பெற்ற] ஓர் உள்ளம் ஆயிரமாயிரம் கஃபாவைக் காட்டிலும் சிறந்ததாகும்.

کعبہ بنیاد خلیل آزر است    دل گذرگاہ جلیل اکبراست

கஃபா என்பது ஆஜருடைய மகன் – [அல்லாஹ்வின்] நேசரான ஹழ்ரத் இப்ராஹீம் [அலை] அவர்களால் அஸ்திவாரமிடப்பட்ட இடமாகும்.

ஆனால், மனித உள்ளமோ மாபெரும் கீர்த்தி பெற்ற அல்லாஹு தஆலாவின் பேரொளிகள் வந்து செல்லுமிடமாகும்" எனக் கூறுகின்றார்.

இந்த மனித உள்ளம் அல்லாஹு தஆலாவின் பேரொளிகள் கடந்து செல்லுமிடமாக மாறியதால் இவ்வுள்ளத்தை "அல்லாஹ்வின் வீடு" என அழைக்கின்றோம்.

## உள்ளத்தை பரிசுத்தப்படுத்துவதில் தாமதமேன்?

நாம் நமது வீட்டை சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என விரும்புகின்றோம். வீட்டில் எங்கேனும் சிறிது குப்பைக்கூளம் இருக்கக் கண்டால் "இதனை ஏன் சுத்தப்படுத்தவில்லை" என்று வீட்டுப் பெண்களை திட்டுகிறோம். தமது இல்லங்களை பரிசுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என ஆசைப்படுகின்றவர்கள் சற்று சிந்திப்பார்களாக! ஒரு முஃமினின் உள்ளமும் அல்லாஹு தஆலாவின் இல்லமாகும். இதனையும் பரிசுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால், பாவங்கள் எனும் குப்பைக் கூளங்கள் உள்ளத்தில் நிரம்பி கிடக்கின்றன. அந்தோ கைசேதம்! நாம் பரிசுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டிய உள்ளத்தை குப்பைக் கூடையாக ஆக்கி வைத்துள்ளோம். உள்ளம் என்பது அல்லாஹு தஆலாவின் இல்லமாகும். எனவே, அவனும் அவ்வுள்ளம் பரிசுத்தமாக இருக்க வேண்டுமென விரும்புகிறான். நீங்களே சற்று சிந்தியுங்கள்! உங்களிடம் அழுக்கடைந்த பாத்திரத்தைக் கொண்டு வந்து, அதில்

பாலை ஊற்றும்படி கூறினால், அதனை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா? இவ்வளவு அழுக்கடைந்த பாத்திரத்தில் பாலை எவ்வாறு ஊற்ற முடியும்? எனக் கூறி மறுத்துவிடுவீர்கள். எவ்வாறு நாம் அழுக்கடைந்த பாத்திரத்தில் பாலை ஊற்ற விரும்பமாட்டோமோ அதே போன்றுதான் அல்லாஹு தஆலாவும் அழுக்கடைந்த உள்ளங்களுக்கு தனது அன்பை வழங்க விரும்புவதில்லை. மாறாக, அதனை நன்றாக தேய்த்து தூய்மையாக்கி பளிச்சென மின்ன வைக்க வேண்டும் என அவன் விரும்புகின்றான். எனவே, அவ்வுள்ளத்திலிருந்து பாவங்களின் இருளைப் போக்கிவிட்டால், அது கண்ணாடியைப் போன்று பரிசுத்தமாகிவிடும். பிறகு அல்லாஹு தஆலாவின் அருள்கள், தாமாகவே அதனுள் வர ஆரம்பித்து விடும். நாம்தாம் அதனை சுத்தப்படுத்துவதில் தாமதம் செய்து வருகிறோம்.

ஹள்ரத் அஷ்ரஃப் அலி தானவீ (ரஹ்) அவர்களின் கலீஃபா –காஜா மஜ்தூப் (ரஹ்) அவர்கள் ஒரு கவிதை பாடினார்கள். அது சாதாரண நடையில் இருந்தாலும் அதன் உட்கருத்து ஹள்ரத் தானவீ (ரஹ்) அவர்களுக்கு எந்தளவு பிடித்துவிட்டதென்றால், நான் வசதி படைத்தவனாக இருந்திருந்தால் இக்கவிதைக்கு பரிசாக ஒரு லட்சம் ரூபாய் வழங்கியிருப்பேன் என்று அந்த காலத்தில் கூறினார்கள். இதோ! அக்கவிதை,

ہر تمنا دل سے رخصت ہو گئی    اب تو آ جا اب تو خلوت ہو گئی

**எல்லா வகையான ஆசைகளும் என் மனதை விட்டு அகன்று விட்டன.**

**[ஓ அல்லாஹ்வே!] இப்பொழுது நீ வந்து விடு! [ஏனெனில்] இப்பொழுது [உனக்காக என் மனதில் முற்றிலுமாக] தனிமை கிடைத்து விட்டது.**

எப்பொழுது மனிதன் எல்லா வகையான ஆசா பாசங்களையும் மனதை விட்டு அகற்றிக் கொள்வானோ, அச்சமயம் அல்லாஹு தஆலாவின் அபரிமிதமான அருட்கொடைகள் அவ்வுள்ளத்தின் மீது இறங்க ஆரம்பித்து விடுகின்றன.

## ஓர் அபூர்வமான உதாரணம்

ஓர் உதாரணத்தின் பக்கம் கவனத்தை செலுத்துங்கள்! எவ்வீட்டில் உயிருள்ளவையின் உருவப்படங்கள் இருக்குமோ அவ்வீட்டிற்கு அல்லாஹு தஆலாவின் அருளைக் கொண்டுவரும் வானவர்கள் வரமாட்டார்கள் என்பது ஃபிக்ஹு மார்க்கச் சட்டமாகும். முற்றிலும் இதே போன்று எந்த மனிதனின் உள்ளத்தில் யாருடைய உருவமாவது, இடம் பிடித்திருக்குமேயானால் அவ்வுள்ளத்தில் அல்லாஹு தஆலா வருவதற்கு எவ்வாறு விரும்புவான்?

அருளைக் கொண்டு வரும் வானவர்களே வருகைத் தராத பொழுது அவ்வருள்களைப் பொழியக்கூடிய அல்லாஹ்வின் அன்பு எவ்வாறு வந்து சேரும்? எனவே, அந்த அருளாளனும் உள்ளத்தில் யாருடைய உருவமும் இருக்கக் கூடாது என விரும்புகிறான்.

இன்றைய காலத்தில் அதிலும் குறிப்பாக வாலிபர்களின் உள்ளங்களில் பல வகை உருவங்கள் குவிந்து கிடக்கின்றன. பாதையில் சென்று கொண்டிருக்கும் போது, எதன் மீதெல்லாம் பார்வை படுகிறதோ அவை அனைத்தும் உள்ளத்தில் பதிந்து விடுகின்றன. அனுதினமும் புதிய புதிய வடிவங்கள் உள்ளத்தில் பதிவாகிக் கொண்டே இருக்கின்றன. இப்படிப்பட்ட உள்ளத்தில் அல்லாஹு தஆலாவின் அன்பின் இன்பமும் சுவையும் எவ்வாறு உருவாகும். எனவே உள்ளத்தின் மீது உழைப்பது அவசியமாக இருக்கிறது.

# உடல் உறுப்புகளனைத்தும் உள்ளத்திற்கு உடன்பட்டவைகள்

சற்று சிந்தித்துப் பாருங்கள்! மனிதனின் உறுப்புகள் அனைத்தும் உள்ளத்திற்கு கட்டுப்பட்டவைகளாகவே இருக்கின்றன. ஒரு மனிதர் தங்கள் மீது கோபமடைந்தால் அவர் தங்களை பார்க்க மாட்டார். நீங்கள் அவரிடம் "அன்பரே! ஏன் என்னைத் தாங்கள் பார்ப்பதில்லை என்று வினவினால் அதற்கு அவர் எனது உள்ளம் விரும்பவில்லை என பதிலளிப்பார். பார்ப்பதென்பது கண்ணுடைய வேலை. ஆனாலும், என் உள்ளம் விரும்பவில்லை என்று கூறுகிறார்.

பிள்ளை சாப்பிட மறுக்கிறது. தாய் கேட்கிறாள் : மகனே! ஏன் உணவை சாப்பிட மாட்டேன் என்கிறாய் என்று. அதற்கு என் உள்ளம் விரும்ப வில்லை என மகன் பதிலளிக்கிறான். சாப்பிடுவது வாயின் வேலை, வயிற்றின் தேவை. ஆனால், எனது உள்ளம் விரும்பவில்லை என்று கூறுகிறான்.

இதே போன்று ஒருவரிடம், "சகோதரரே! நீர் என் பேச்சை ஏன் கேட்பதில்லை" என்று கேட்டால், அவர் "என் உள்ளம் விரும்பவில்லை என்றே கூறுகிறார். கேட்பதென்பது காதின் வேலை. ஆனால், உள்ளம்தான் அதை முடிவெடுக்கிறது.

ஆக, கண்ணாக இருந்தாலும் காதாக இருந்தாலும் உடலின் எல்லா உறுப்புகளும் உள்ளத்தையே பின்பற்றுகின்றன. உள்ளத்தின் நிலை என்னவோ அதுவே பிற உறுப்புகளின் செயல்களாக வெளிவருகின்றன.

எனவே, உள்ளம் சீர் பெறும் போது மனிதன் சீர் பெறுகிறான். உள்ளம் சீரழியும் போது மனிதனும் சீரழிகிறான் என்ற உண்மையை நாம் இங்கு தெரிந்து கொள்கிறோம்.

دل کے بگاڑ ہی سے بگڑتا ہے آدمی　　اور جس نے اسے سنوار دیا وہ سنور گیا.

**உள்ளம் சீர்கெடுவதினால்தான் மனிதனும் சீர்கெட்டுவிடுகிறான்.**

**எவர் அதனை சீர்படுத்திக் கொள்வாரோ அவர், சீர்திருத்தம் அடைகிறார்.**

உள்ளம் – அது சிறியதாக இருந்தாலும், தங்கக்கட்டியாகும். அது அழகு பெறும் போது மனிதனையும் சேர்த்து அலங்கரித்து விடுகிறது.

## பார்ப்பதற்கு சிறியதானாலும் உண்மையில் பெரியது.

நமது உள்ளம் அல்லாஹு தஆலாவிடம் பெரும் விலை மதிப்புள்ளதாகும். சற்று கவனியுங்கள்! ஒரு பெட்டியின் மதிப்பு அதனுள்ளிருக்கும் பொருட்களின் விலைமதிப்புக்குத் தக்கவாறு அமைகின்றது. வீடுகளில் பெரிய பெரிய பெட்டிகள் இருப்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். பெரும்பாலான பெண்கள், கோடைக் காலத்தில் (அல்லது குளிர்க் காலத்தில் பயன்படும்) போர்வை, தலையணை மற்றும் பழைய துணி மூட்டைகளை அந்த பெட்டியில் போட்டு, பத்திரப்படுத்தி வைத்து விடுவார்கள். அதற்கு பூட்டு போடமாட்டார்கள். அது திறந்த நிலையிலேயே இருக்கும். ஆனால், இதற்கு மாறாக ஒரு சிறிய நகைப் பெட்டி ஒன்று இருக்கும். அதில் தங்கம், வெள்ளி போன்ற நகைகளை மறைத்து வைத்து, பூட்டையும் போட்டு வைப்பார்கள். வீட்டை பூட்டி விட்டு எங்கேனும் வெளியில் செல்வதாக இருந்தால், கடைசியாக ஒரு பார்வை அதைப் பார்த்து விட்டு தான் புறப்பட்டுச் செல்வார்கள். திரும்பி வந்து வீட்டில் நுழைந்ததும் முதலில் பார்ப்பது அந்த பெட்டியைதான். பாதுகாப்பாக இருக்கிறதா? இல்லையா? என்று கவனிப்பார்கள்.

எவரேனும், "வீடு தீப்பிடித்து எரிகிறது" எனச் சொன்னால்

உடனே வீட்டை விட்டு வெளியேரும் சமயம் தம்முடன் அந்த சிறிய நகைப்பெட்டியையும் உடன் எடுத்துச் சென்றுவிடுவார்கள். ஏனெனில், அது அளவில் சிறியதாக இருந்தாலும் விலைமதிப்பில் பெரியதாகும். இதைப் போன்றுதான் மனித உள்ளமும். அது அளவில் சிறியதாக இருந்தாலும் பெரும் விலைமதிப்புள்ளதாகும். ஏனெனில், அது அல்லாஹு தஆலாவின் மஃரிஃபத் எனும் மெய்ஞானம் மற்றும் அவனது தஜல்லியாத் எனும் பேரொளிகள் சங்கமிக்குமிடமாகும். இதனால்தான் அல்லாஹு தஆலாவிடத்தில் அதற்கு மிக உயர்ந்த மதிப்புள்ளது. எனவே தான் மறுமை நாளில் அல்லாஹு தஆலா அடியானிடத்தில் உள்ளத்தைப் பற்றிதான் கேட்பான். அதைப் பற்றி அல்லாஹு தஆலா திருக்குர்ஆனில் கூறுகின்றான் :

يَوْمَ لَا يَنفَعُ مَالٌ وَلَا بَنُونَ إِلَّا مَنْ أَتَى اللَّهَ بِقَلْبٍ سَلِيمٍ

**மறுமை நாளில் செல்வமோ, பிள்ளைகளோ பலன் தர மாட்டார்கள். ஆம்! அங்கு எம்மனிதன் பண்பட்ட உள்ளத்தைக் கொண்டு வருவாரோ, அது தான் அவருக்கு பலனளிக்கும்.** (அல்குர்ஆன் 26:88, 89)

**ஓர் உதாரணம்**

சற்று சிந்தித்துப் பாருங்கள்! நீங்கள் ஆப்பிள் பழம் வாங்க கடைவீதிக்குச் சென்று, ஒரு தொகை கொடுத்து ஒரு ஆப்பிள் வாங்குகிறீர்கள். ஆனால் அதன் மீது புள்ளிகள் நிறைந்திருந்தால் கடைக்காரரைப் பார்த்து காசு கொடுத்துதானே பழம் வாங்குகிறோம், நல்ல பழத்தை கொடுங்கள்! இந்த புள்ளிகள் நிறைந்த பழம் வேண்டாம் என்று திரும்ப கொடுத்துவிடுவீர்கள்! இங்குதான் நாம் சிந்திக்க வேண்டும்! நாம் காசுக்கு பகரமாக புள்ளிகள் உள்ள ஆப்பிளை வாங்க விரும்புவதில்லை எனும் போது அல்லாஹு தஆலா தனது திருப்பொருத்தம், மறுமையின்

நிரந்தரமான வாழ்வு மற்றும் சுவர்க்கத்திற்குப் பகரமாக கறைப் படிந்த உள்ளங்களை வாங்க விரும்புவானா? அவனும் பாவங்கள் மற்றும் படைப்பினங்கள் மீதுள்ள மோகம் போன்ற எந்த கறையும் படியாத முற்றிலும் பரிசுத்தமான உள்ளத்தையே விரும்புகின்றான். இதற்கு கல்பே ஸலீம் என்று (அரபியில்) கூறப்படும். படைப்பினங்களின் மீதுள்ள மோகத்தை விட்டு பரிசுத்தமாக இருக்கின்ற உள்ளம்தான் கல்பே ஸலீம் ஆகும்.

இப்படிப்பட்ட உள்ளத்தைதான் அல்லாஹு தஆலா ஏற்றுக் கொள்கின்றான். எனவே, அவன் திருக்குர்ஆனில், கூறுகிறான் :

مَا جَعَلَ اللّٰهُ لِرَجُلٍ مِّنْ قَلْبَيْنِ فِيْ جَوْفِهٖ

**அல்லாஹு தஆலா எந்த மனிதனின் நெஞ்சிலும் இரு உள்ளங்களைப் படைக்கவில்லை.** (அல்குர்ஆன் – 33 : 04)

அப்படி இரு உள்ளங்களைப் படைத்திருந்தால், ஓர் உள்ளம் மனிதர்களுக்கென்றும் மற்றொன்றை ரஹ்மானுக்கென்று கொடுத்து விடலாம். அல்லாஹ் கூறுகிறான் : இல்லை! இல்லை! உள்ளம் என்பது ஒன்றுதான். அது (அல்லாஹ்) ஒருவனுக்காகவே இருக்கிறது.

உள்ளம், வக்ஃப் செய்யப்பட்ட சொத்தாகும். அல்லாஹு தஆலா உள்ளங்களை விலைக்கு வாங்கும் வியாபாரியாக இருக்கிறான். அவன் உங்களிடத்தில் உங்கள் உள்ளங்களை வாங்க விரும்புகின்றான் – இங்கொரு அறிவார்ந்த விளக்கம் எனது சிந்தனையில் இப்பொழுது உதித்தது. அதாவது அல்லாஹு தஆலா தனது திருமறையில்,

اِنَّ اللّٰهَ اشْتَرٰى مِنَ الْمُؤْمِنِيْنَ اَنْفُسَهُمْ وَاَمْوَالَهُمْ بِاَنَّ لَهُمُ الْجَنَّةَ

**அல்லாஹு தஆலா ஈமான் கொண்ட விசுவாசிகளிடத்தில்**

**சொர்க்கத்திற்கு பகரமாக அவர்களின் உயிர்களையும், செல்வங்களையும் விலைக்கு வாங்கி விட்டான்.** (அல்குர்ஆன்–9:111) எனக் கூறுகின்றான்.

இங்கு நமது சிந்தனையில் ஒரு கேள்வி எழுகின்றது. அதாவது மனிதனின் உள்ளம், அல்லாஹுதஆலாவின் இல்லமாகும். இந்த இல்லத்தை அல்லாஹ் விலைக்கு வாங்குவதாக இருந்தால், நாம் சொர்க்கத்திற்கு பகரமாக மனிதனின் உள்ளத்தை வாங்கிவிட்டோம் என்றல்லவா கூற வேண்டும். ஆனால், இங்கு உள்ளத்தைப் பற்றி கூறாமல், மனிதனின் உயிரையும் அவனது செல்வத்தையும் வாங்கிவிட்டதாகக் குறிப்பிடுகிறான். இங்கு உள்ளத்தைப் பற்றிய பேச்சே இல்லையே! ஏன்? என்ற கேள்வி எழுகின்றது.

இதற்கு திருக்குர்ஆனின் விரிவுரையாளர்கள் கூறும் பதிலாவது: அல்லாஹு தஆலா இங்கு உயிர் மற்றும் செல்வத்தை வாங்கியதாகக் கூறினான்.உள்ளத்தைப் பற்றி குறிப்பிடவில்லை. காரணம் என்னவெனில், அல்லாஹு தஆலா மனித உள்ளத்தை தனக்காக வக்ஃபு செய்து கொண்டான் மார்க்கச் சட்டப்படி வக்ஃப் செய்யப்பட்ட சொத்துக்களை விலைக்கு வாங்குவது விற்பனை செய்வது கூடாது. எனவே, "மனிதனிடத்தில் உள்ளத்தைத் தவிர உயிரும், செல்வமும்தான் மீதமாக இருக்கிறது. அல்லாஹு தஆலா அதனையும் சொர்க்கத்திற்கு பகரமாக விலைக்கு வாங்கிவிட்டான். மனித உள்ளமோ முன்பே வக்ஃப் செய்யப்பட்டுவிட்டது. அது அல்லாஹு தஆலாவிற்காக ஏற்கனவே வக்ஃபாகி விட்டது. ஓர் இடத்தைப் பள்ளிவாசல் கட்டுவதற்கென்று நாம் கொடுத்து விட்டால் அது வக்ஃப் ஆகிவிடும் என்று கூறுவதைப் போல், மனிதனின் உள்ளம், அல்லாஹு தஆலாவை நினைவு கூறுவதற்கென்று வக்ஃப்பாகி

விட்டது. எனவே, இவ்வுள்ளத்தில் அல்லாஹ்வின் நினைவும் அச்சமும் குடியேறி விட்டால் இந்த உள்ளம் மிகவும் விலை மதிப்புள்ளதாக ஆகிவிடும்.

## உலக பொருட்கள் அனைத்தும் உள்ளத்தின் விலைக்கு ஈடாகாது.

ஒரு முறை ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் திஹ்லவீ (ரஹ்), டெல்லி ஜாமிஆ மஸ்ஜிதில் குத்பா–பிரசங்கம் செய்தார்கள்.

அப்பிரசங்கத்தில், ''முகலாய மன்னர்களே! நான் உங்களுடைய கஜானாக்கள் குறித்து நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனாலும் இறைநேசர்களின் நெஞ்சினுள் ஓர் உள்ளம் இருக்கிறது. உங்கள் கஜானாக்கள் அனைத்தும் அந்த உள்ளத்தின் விலைக்கு நிகராகாது'' எனக் கூறினார்கள். அப்படியானால் இந்த உள்ளத்தின் மதிப்புதான் என்ன என்பதை சிந்தித்துப் பாருங்கள்!

எனவே, இந்த உள்ளத்தை விலைமதிப்புள்ளதாக மாற்றுவதற்கு அதன் மீது உழைப்பதும் அதை அலங்கரிப்பதும் அவசியமாகும். அதை அலங்கரிக்க வேண்டுமென்றால் உள்ளத்தை விட்டு உலக ஆசாபாசங்களை அகற்ற வேண்டும். அதன் பின்னர் தான் இந்த உள்ளம் அழகுள்ளதாக மாறும். மேலும் தேவையில்லாத, முறை தவறிய ஆசைகளை உள்ளத்தை விட்டு அகற்ற வேண்டும். அதன் பிறகு தான் மனித உள்ளம் சீர்பெறும். உள்ளத்தை விட்டு உலக ஆசை எவ்வாறு வெளியாகும்? அதற்காக அல்லாஹு தஆலாவின் நல்லடியார்களின் சமூகத்தில் சென்று அவர்களிடம் கற்று, முறையாக திக்ரு செய்து வரவேண்டும். ஏனெனில், அதிகமதிகமாக திக்ரு செய்வதைக் கொண்டுதான் மனித உள்ளம் சீர்பெறும்.

## ஆச்சரியமான ஓர் உதாரணம்

திருக்குர்ஆனில் சூரத்துன் நம்லில் ஒரு வசனம் உண்டு. அதிலிருந்து அதிசயிக்கத்தக்க விஷயத்தை ஹள்ரத் அஷ்ரஃப் அலி தானவீ (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள்.

அரசி பல்கீஸ் அம்மையார், பிரதானிகளிடம் ஹள்ரத் சுலைமான் (அலை) அவர்களோடு போரிடலாமா? வேண்டாமா? என்று ஆலோசித்த போது, பிரதானிகள் "நாங்கள் உங்களுடன் இருக்கிறோம். தாங்கள் போர்செய்ய விரும்பினால் அதற்கும் தயாராக இருக்கிறோம். அல்லது வேறு வழியை கையாள வேண்டுமானால் நாங்கள் அதற்கும் தயாராக இருக்கிறோம்" என்று பதிலளித்தனர்.

பல்கீஸ் அம்மையார் பெண்மணியாக இருந்த போதிலும் மிகவும் புத்திசாலியானவராக இருந்த காரணத்தால் பின் வரும் பதிலைக் கூறினார்கள்.

إِنَّ الْمُلُوكَ إِذَا دَخَلُوا قَرْيَةً

**அரசர்கள் ஏதேனும் ஓர் ஊரை வெற்றி கொண்டு, அதில் நுழைந்தால், أَفْسَدُوهَا (வெற்றிக்களிப்பில்) அவ்வூரை பாழாக்கி விடுவார்கள். وَجَعَلُوا أَعِزَّةَ أَهْلِهَا أَذِلَّةً அதிலுள்ள கண்ணியமானவர் களைக் கேவலமானவர்களாய் ஆக்கி, வெளியேற்றி விடுவார்கள்.**

இது, அக்காலத்தில் நடைபெற்ற சம்பவம் குறித்து ஆயத்தின் வெளிப்படையான கருத்தாகும். ஆனால் இந்த ஆயத்திற்கு அஷ்ரஃப் அலி தானவீ (ரஹ்) அவர்கள் கூறக்கூடிய நுட்பமான கருத்து என்ன என்பதைப் பாருங்கள்!,

إِنَّ الْمُلُوكَ என்பதன் பொருள், அரசர்களுக்கெல்லாம் அரசனாகிய அல்லாஹ்வும் அவனது திரு நாமமும் என்று வைத்துக்

கொள்ள வேண்டும்.

قَرْيَةً என்பது உள்ளம் எனும் ஊரைக் குறிக்கிறது என்று பொருள் கொள்ளும் போது,

اِنَّ الْمُلُوْكَ اِذَا دَخَلُوْا قَرْيَةً என்பதன் பொருள், அல்லாஹு தஆலாவின் திருப்பெயர் உள்ளத்தில் நுழைந்து இடம் பிடித்து விட்டால், اَفْسَدُوْهَا அவ்வுள்ளத்தில் பெரும் புரட்சியை ஏற்படுத்தி விடுகிறது. وَجَعَلُوْآ اَعِزَّةَ اَهْلِهَآ اَذِلَّةً மேலும் அவ்வுள்ளத்திற்கு கண்ணியமாக தெரியும் உலகை கேவலப்படுத்தி அங்கிருந்து வெளியாக்கி விடும்.

எனவே, நண்பர்களே! அல்லாஹு தஆலாவை நினைவு கூர்ந்து திக்ர் செய்வதில் மாபெரும் பரக்கத் உள்ளது. இது உலக ஆசையை உள்ளத்தை விட்டு வெளியாக்கி விடுகின்றது. அல்லாஹு தஆலாவின் அன்பால் உள்ளங்களை ஒளி மயமாக்கி விடுகின்றது. மேலும், உள்ளம் எப்பொழுது பரிசுத்தமாகி சீர் பெற்று விடுகின்றதோ, அப்பொழுது மனிதனின் ஆத்மீக நிலைகளைப் பற்றி என்னவென்று கூறுவது!

## நேசனின் நினைவு உள்ளத்தை துடிதுடிக்க வைத்து விட்டது.

நபி இப்ராஹீம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் தமது ஆடுகளுடன் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அருகில் ஒருவர், பின்வரும் வார்த்தைகளைக் கூறிய வண்ணம் கடந்து சென்றார்.

سُبْحَانَ ذِىْ الْمُلْكِ وَالْمَلَكُوْتِ سُبْحَانَ ذِىْ الْعِزَّةِ وَالْعَظَمَةِ
وَالْهَيْبَةِ وَالْقُدْرَةِ وَالْكِبْرِيَآءِ وَالْجَبَرُوْتِ

அம்மனிதர் அல்லாஹு தஆலாவை மிகவும் அழகான வார்த்தைகளைக் கொண்டு புகழ்ந்ததைக் கேட்டு ஹழ்ரத் இப்ராஹீம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் உள்ளம், அல்லாஹு தஆலாவின் மீதுள்ள அன்பின் மகிழ்வால் துடிதுடித்து விட்டது. மேலும், அவர்களது உள்ளம்,

ہوتی رہے ثناء تیرے حسن و جمال کی

'உனது அழகு எழிலின் புகழ் சதாவும் நிலைத்து நிற்கட்டும்' என்று கவிஞர் கூறுவதைப் போன்று, மென்மேலும் அப்புகழைக் கேட்க நாடியது.

எனவே, ஹழ்ரத் இப்ராஹீம் நபி (அலைஹிஸ் ஸலாம்) அவர்கள், அம்மனிதரிடம், சகோதரரே! இப்புகழ்மிக்க வார்த்தைகளை மீண்டும் ஒரு முறை கூறுவீராக" எனக் கேட்டுக் கொண்டார்கள். அதற்கு அம்மனிதர், "இதற்கு பகரமாக எதைக் கொடுப்பீர்கள்" எனக் கேட்க, இந்த ஆட்டு மந்தையில் பாதியளவு உமக்கு கொடுத்து விடுகின்றேன்" எனக் கூறியதும், அவர் மீண்டும் அவ்வார்த்தைகளைக் கூறிக் காட்டினார். இதனைக் கேட்டதும் ஹழ்ரத் இப்ராஹீம் (அலைஹிஸ் ஸலாம்) அவர்கள் இன்பத்தில் மூழ்கி திளைத்தார்கள். செவிகளில் பழச்சாறு ஊற்றப்பட்டதைப் போன்றிருந்தது. மீண்டும், "இன்னும் ஒரு முறை கூறுங்கள்!" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டதும், அவர், "இப்பொழுது என்ன தருவீர்கள்? எனக் கேட்டார். அதற்கு நபி இப்ராஹீம் (அலைஹிஸ் ஸலாம்) அவர்கள்," மீதமுள்ள ஆட்டு மந்தையை உன்னிடம் ஒப்படைத்து விடுகிறேன்" எனக் கூறியதும், அவர் அவ்வார்த்தைகளை மீண்டும் கூறினார். ஆனால், இம்முறையும் அவர்கள் ஆறுதல் அடையவில்லை. மீண்டும் ஒரு முறை கேட்க வேண்டும் என்ற ஆசையில் உள்ளம் துள்ளியது.

சகோதரரே! மீண்டும் ஒரு முறை அவ்வார்த்தை களைக் கூறுங்கள்! என வேண்டினார்கள். இப்பொழுது எனக்கு கொடுப்பதற்கு தங்களிடம் என்ன இருக்கிறது? என்று அவர் வினவினார்.

ஹழ்ரத் இப்ராஹீம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள், ''உமக்கு இந்த ஆடுகளை மேய்க்க ஆட்டிடையன் தேவைப்படுவான். எனவே, நானே அவற்றின் மேய்பாளனாக ஆகிவிடுகிறேன். தாங்கள் மீண்டும் ஒரு முறை அவ்வார்த்தை களைக் கூறுங்கள்" எனக் கேட்டுக் கொண்டதும், அம்மனிதர், "இப்ராஹீம் கலீலுல்லாஹ் (அலைஹிஸ் ஸலாம்) அவர்களே! அல்லாஹு தஆலா உங்கள் மீது அருள் பொழியட்டும்! நான் அல்லாஹு தஆலாவினால் அனுப்பப்பட்ட வானவராவேன். அவன் என்னை உங்களிடத்தில் அனுப்பி, ''எனது நேசராகிய இப்ராஹீமிடத்தில் அவருக்கு முன்பாக எனது நாமத்தை எடுத்துரைத்து, எனது நாமத்திற்கு என்ன விலை மதிப்பைப் போடுகிறார் என்பதைப் பார்" எனக் கூறி அனுப்பி வைத்தான்" எனக் கூறினார்.

எனவே, எப்பொழுது உள்ளம் சீர்பெற்றுவிடுமோ அப்பொழுது அடியான், தனது உயிரையும் அல்லாஹ்வின் திருநாமத்தின் மீது தியாகம் செய்து விடுகின்றான். இதனை ஒரு கவிஞர், பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

جان دی، دی ہوئی اسی کی تھی　　حق تو یہ ہے کہ حق ادا نہ ہوا

[அவனது திருப்பெயரின் மீது] அவன் வழங்கிய உயிரை அர்ப்பணம் செய்து விட்டேன்.

உண்மை என்னவெனில், அவ்வாறு அர்ப்பணித்தும் அவனுக்குச் செய்ய வேண்டிய கடமை நிறைவேறவில்லை"

இவ்வகையான அடியான் தனது உயிரையும் அர்ப்பணித்து விட்டு, இதுவும் அல்லாஹு தஆலா, தன் மீது செய்த உபகாரம் எனவும் எண்ணிக் கொள்கின்றான். எனவே, இந்த உள்ளத்தை சீர்படுத்தும் உழைப்பை செய்தால் அது சீர் பெறுகின்றது. அவ்வாறில்லையெனில், சீரழிந்து நாசமாகி விடுகின்றது. ஆதலால், உள்ளம் என்பது நமக்கு மிக முக்கியமான பொருளாகும்.

## உள்ளம் சீர்கெடுவதற்கோர் உதாரணம்

உள்ளம் மிக சுலபமாக கெட்டுப்போய் விடுகிறது. உதாரணமாக நமது வீடுகளில் ஜன்னல்கள் பொருத்தப் பட்டுள்ளன. அந்த ஜன்னல்கள் திறக்கப்பட்டிருந்தால் போதும் முழு அறையும் தூசியாகிவிடும். இதே போன்று கண் என்னும் ஜன்னல் திறந்து இருக்குமேயானால், உள்ளம் என்னும் அறையில் மண், தூசி வந்து விடும். இன்றைய இளைஞர்களின் (கண்கள் என்னும்) ஜன்னல்கள் திறந்தே இருக்கின்றன. அந்நியப் பெண்களை ரசித்துக் கொண்டே இருக்கிறது. இறுதியில் இதயம் கெட்டு விடுகிறது. பின்பு படிப்பில் உள்ளம் இலயிப்பதில்லை. இதன் அடையாளம் என்னவென்றால் நினைவாற்றல் குன்றிவிடும். படித்ததை மறந்து விடுவார்கள். முன்னால் புத்தகம் இருக்கும். ஆனால், உள்ளம் வேறு இடத்தில் இருக்கும்.

کتاب کھول کے دیکھوں تو آنکھ روتی ہے ورق پہ ورق پہ

"புத்தகத்தைத் திறந்து பார்த்தால் கண் அழுகின்றது. பக்கம், பக்கமாக புரட்டினாலும் அவர்களுக்கு புத்தகத்தின் "பக்கம்" தென் படுவதில்லை.

மாறாக, அவர்களுக்கு யாரோ ஒருவரின் "முகம்" தான் தென்படுகிறது" என ஒரு கவிஞர் வர்ணிக்கின்றார்.

காரணமென்னவெனில், உள்ளம் சீரழிந்து விட்டது. இப்பொழுது உள்ளம் எவ்வாறு படிப்பில் இலயிக்கும்?

## தூக்கம் மற்றும் மரணத்தின் வேறுபாடு

ஒருவர், ஹழ்ரத் ஹஸன் பஸரி (ரஹ்) அவர்களின் சமூகத்திற்கு வருகைதந்து, "ஹழ்ரத் அவர்களே! எங்களின் உள்ளங்கள் தூங்கி விட்டதா? எனத் தெரியவில்லை" எனக் கூறினார். அதற்கு ஹழ்ரத் அவர்கள், "அது எவ்வாறு?" எனக் கேட்க, அதற்கவர்," ஹழ்ரத் அவர்களே! தாங்கள் தன்னுடைய பாடங்களை நடத்துகிறீர்கள். மற்றும் உபதேசம் புரிகின்றீர்கள். ஆனால், எங்களுடைய உள்ளங்களில் எந்த பிரதிபலிப்பும் ஏற்படுவதில்லை!" எனக் கூறினார். இதனைக் கேட்ட ஹழ்ரத் அவர்கள், "அவ்வாறென்றால், உள்ளம் தூங்கி விட்டது" எனக் கூறாதீர்கள். மாறாக உள்ளம் மரணித்து விட்டது எனக் கூறுங்கள் என்றார்கள். வருகை தந்த அந்த நபர் மிகவும் ஆச்சரியமடைந்து, ஹழ்ரத் அவர்களே! உள்ளம் எவ்வாறு மரணித்துவிடுகின்றது" எனக் கேட்டார். அதற்கு ஹழ்ரத் அவர்கள்," பாருங்கள்! தூங்கிக் கொண்டிருக்கும் மனிதனை அசைத்து எழுப்பினால், அவன் விழித்து விடுகின்றான். அதே மனிதனை பலமுறை அசைத்தும் அவன் எழவில்லையானால், அவன் தூக்கத்தில் இருக்கவில்லை. மாறாக, அவன் மரணித்திருக்கின்றான்".

எந்த மனிதருக்கு அல்லாஹ்வின் வார்த்தைகளையும் நபியவர்களின் அறிவுரைகளையும் கேட்டப் பிறகும் உள்ளத்தில் எந்த மாற்றமும் ஏற்படவில்லையோ அது அவரின் உள்ளம் மரணித்துவிட்டதற்கான அடையாளம் எனக் கூறினார்கள். எனவே, இந்த உள்ளம் ஆத்மீக ரீதியில் மரணித்து விடுவதற்கு முன்பாக நாம் அதை உயிரோட்டத்துடன் வைத்துக் கொள்ள வேண்டும்

## ஆன்மீகப் பிணிகள்

உடல் ரீதியாக நோய்கள் தோன்றுவதைப் போல், ஆன்மீக ரீதியிலும் பல நோய்கள் உருவாகின்றன. ஒரு சிலருக்கு ஷுகர் – நீரிழிவு நோய் இருக்கிறது. ஒரு சிலருக்கு இரத்தக்கொதிப்பு இருக்கிறது. சிலருக்கு மலேரியா காய்ச்சல் வந்துவிடுகிறது. இதே போன்று ஆன்மீக ரீதியான நோய்களும் ஏற்படுகின்றன. குரோதம், பொறாமை, தற்பெருமை, காம இச்சைகள், கோபம் போன்றவைகள், மனிதனின் உள்ளம் சம்பந்தமான நோய்களாகும். உள்ளம் சம்பந்தமான நோய்கள் அனைத்தும் உள்ரங்கமாகவும், உயிர்க்கொல்லியாகவும் இருக்கின்றன. இன்னும் சொல்லப் போனால், உள்ளம் சம்பந்தமான நோயில் அகப்பட்டவர், மிகவும் பரிதாபத்திற்குரியவராவார். இன்றைய கால கட்டத்தில் அல்லாஹ் நாடிய சிலரைத் தவிர அனைவரும் ஆன்மீக ரீதியான நோயில் அகப்பட்டவர்களாகவே இருகின்றோம்.

## உள்ளத்திற்கு சிகிச்சையளிக்கும் வைத்தியர் யார்?

இப்போது இந்த உள்ளத்திற்கு எவ்வாறு சிகிச்சையளிப்பது? என்றால், உள்ளத்தின் சிகிச்சைக்கும், சீர்திருத்தத்திற்கும் இறைநேசர்களின் சமூகத்திற்கு சென்று அமர வேண்டும். அவர்கள்தாம் உள்ளம் சம்பந்தமான அனைத்து நோய்களின் வைத்தியர்கள் ஆவர். உள்ளம் சம்பந்தமான அனைத்து நோய்களுக்கும் உரிய மருந்தை வழங்குவார்கள். அவர்களின் திருச்சமூகத்தில் சென்று அமரும் பொழுது அல்லாஹு தஆலாவின் அன்பு உள்ளத்தினுள் ஊடுருவுகிறது. மேலும், சான்றோரின் சகவாசத்தினால் உள்ளம் தூய்மையடைந்து உயிர்ப்பித்தெழுகிறது. இவர்கள் மனித உள்ளங்களில் அல்லாஹு

தஆலாவின் அன்பை ஏற்படுத்தி ஒரு கலகலப்பை உண்டாக்கி விடுகின்றார்கள். அல்லாஹு தஆலாவை மறந்து தனது வாழ்வை வீணடித்துக் கொண்ட மறதியாளர்கள், இம்மனிதப்புனிதர்களிடம் வருகை தந்து, அவர்களது சகவாசத்தில் சிறிது நேரம் அமர்ந்ததும் தனது உள்ளங்களில் பெரும் மாற்றத்தை உணருகிறார்கள். மேலும் அவர்களின் உள்ளங்கள் அல்லாஹு தஆலாவின் அன்பினால் குதூகலமடைகின்றது.

## அகப்பார்வைக்கும் கண்பார்வைக்கும் என்ன வித்தியாசம்?

பாருங்கள்! ஒன்று இருக்கிறது, بصارت –பஸாரத் என்பர். மற்றொன்று, அதற்கு بصيرت – பஸீரத் என்பர். கண்பார்வைக்கு بصارت – பஸாரத் என்பர். அகப்பார்வைக்கு بصيرت – பஸீரத் என்பர்.

இன்று நம்மிடத்தில் بصارت – கண்பார்வை இருக்கின்றது. ஆனால் بصيرت – பஸீரத் எனும் உள்ளத்தின் பார்வையை விட்டு தூரமானவர்களாக இருக்கிறோம். எவ்வாறு இக்கண்கள் குருடாக ஆகிவிடுகின்றதோ, அதே போன்று உள்ளமும் குருடாகிவிடுகின்றது. பாருங்கள்! திருக்குர்ஆனில் அல்லாஹுதஆலா ஹழ்ரத் நபி நூஹ் (அலை) அவர்களின் முழுக் கூட்டத்தாரைப் பற்றி, اِنَّهُمْ كَانُوْا قَوْمًا عَمِيْنَ அக்கூட்டத்தினர், குருடர்களாக இருந்தனர்" (7:64) எனக் கூறுகின்றான். என்ன உண்மையில் அவர்கள் கண்பார்வையை இழந்த குருடர்களாக இருந்தார்களா?! இல்லை! மாறாக, அவர்கள் உள்ளத்தின் பார்வையை இழந்த குருடர்களாக இருந்தனர். ஏனெனில், ஹழ்ரத் நபி நூஹ் (அலை) அவர்கள், தம் கூட்டத்தினரை ஓராயிரம் ஆண்டுகளாக அல்லாஹு தஆலாவின்பால் அழைப்பு கொடுத்தப்

பின்னரும் அவர்கள் சத்தியத்தைப் புரிந்து ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகையால், அல்லாஹுத ஆலா அம்மனிதர்களை "குருடர்கள்" எனக் குறிப்பிடுகின்றான். இதன் மூலம், அல்லாஹுதஆலாவிடம் "குருடர்" என்பவர், உண்மையில் உள்ளத்தின் அகப்பார்வை இழந்தவர்தான், என்பது தெளிவாகின்றது.

திருக்குர்ஆனில் மற்றொரு இடத்தில்,

وَمَنْ كَانَ فِىْ هٰذِهٖۤ اَعْمٰى فَهُوَ فِى الْاٰخِرَةِ اَعْمٰى وَاَضَلُّ سَبِيْلًا

பொருள்: **எவர் இவ்வுலகில் நேர்வழியை விட்டும் அகக்குருடராக இருந்தாரோ, அவர் மறுமையிலும் குருடராக இருப்பார். இன்னும் (அவர்) பாதையால் மிகத் தவறியவராவார்.** (அல்குர்ஆன் – 17:72)

அல்லாஹ்வே! நான் உலகத்தில் பார்வையுள்ள மனிதனாக இருந்தேனே!! என்று மறுமையில் மனிதன் கூறுவான். எம்மனிதன் உலக வாழ்வில் அல்லாஹு தஆலாவின் சட்டத்திட்டங்களை மதிக்காமல் வாழ்வானோ, அவன் அல்லாஹு தஆலாவின் பார்வையில் குருடனாகவே கணிக்கப்படுகின்றான். எனவே உள்ளத்தின் அகப்பார்வையை இழந்து, குருடனாக வாழ்வது, அல்லாஹு தஆலாவின் பார்வையில் மிக மோசமான செயலாகும்.

அல்லாஹு தஆலா தன் திருமறை வசனத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறான் :

لَهُمْ قُلُوْبٌ يَّعْقِلُوْنَ بِهَا

**அவர்களுக்கு இதயங்கள் இருந்திருக்குமானால், அதன் மூலம் அவர்கள் விளங்கியிருப்பார்கள்.**

اَوْ اٰذَانٌ يَّسْمَعُوْنَ بِهَا

**காதுகள் இருந்திருக்குமானால் அதன் மூலம் நேர்வழி செய்திகளைக் கேட்டிருப்பார்கள்.**

فَاِنَّهَا لَا تَعۡمَى الۡاَبۡصَارُ

**(அவர்களின் வெளிப்) பார்வைகள் குருடாகவில்லை.**

وَلٰكِنۡ تَعۡمَى الۡقُلُوۡبُ الَّتِىۡ فِى الصُّدُوۡرِ

**எனினும், நெஞ்சங்களுக்குள்ளே இருக்கும் இதயங்கள் குருடாகிவிட்டன.** (அல்குர்ஆன் – 22 : 46)

எனவே, இந்த இதயங்களை உயிர் பெறச் செய்து சீராக்குவது அவசியமாகும்.

## உள்ளம் எப்பொழுது கடினமாகிவிடுகிறது?

எப்பொழுது இந்த உள்ளம், சீர் பெறுமோ, அப்பொழுது அல்லாஹு தஆலாவின் அன்பு அதில் நிறைந்துவிடுகிறது. இச்சமயம் அதன் நிலையோ அலாதியானதாகும். இதனை ஒரு கவிஞர்,

اللہ وہ دل دے جو تیرے عشق کا گھر ہو دائمی رحمت کی تیری اس پہ نظر ہو

**யா அல்லாஹ்! உனது காதல் குடி கொண்டிருக்கும் உள்ளத்தை வழங்குவாயாக!**

**அதில் சதாகாலமும் உனது ரஹ்மத்துடைய பார்வை இருந்து கொண்டே இருக்க வேண்டும்.**

دل دے کہ تیرے عشق میں یہ حال ہو اس کا محشر کا اگر شور ہو تو بھی نہ خبر ہو

**உள்ளத்திற்கு உன்மீதுள்ள அன்பால் மஹ்ஷர் எனும் தீர்ப்புத்திடலில் அமளிதுமளிகள் ஏற்பட்டாலும்,**

**அதைப் பற்றியெல்லாம் எதுவும் தெரியாத [நிம்மதியான] உள்ளத்தை வழங்குவாயாக!**

இது, அல்லாஹுதஆலாவின் நல்லடியார்களின் நிலையாகும். எல்லா நிலைகளிலும் அவர்களது உள்ளங்கள், அல்லாஹுதஆலாவின் அன்பால் நிறைந்திருக்கும். அவனைத் தவிர வேறு எதன் பக்கமும் அவர்களின் கவனம் செல்வதில்லை.

எம்மனிதருக்கு இந்நிலை ஏற்பட்டு விடுமோ அவரது உள்ளம் மிகவும் விலைமதிப்புள்ளதாக ஆகிவிடுகின்றது. பூமியைப் பற்றிய ஆய்வாளர்கள் எழுதுவதாவது:– பூமியின் மீது விவசாயம் செய்வதை விட்டு விட்டால், அது கடினமாக மாறி விவசாயம் செய்வதற்கான தகுதியை இழந்து விடுகின்றது. இதே போன்றுதான் உள்ளத்தின் மீது உழைப்பு செய்யாமல் விட்டுவிட்டால் சிறிது காலத்திற்குப் பின் உள்ளமெனும் பூமியும் கடினமாகிவிடுகிறது.இதற்கு குர்ஆனில் ஆதாரம் இருக்கிறது.

أَلَمْ يَأْنِ لِلَّذِينَ آمَنُوا أَنْ تَخْشَعَ قُلُوبُهُمْ لِذِكْرِ اللَّهِ وَمَا نَزَلَ مِنَ الْحَقِّ

பொருள் :– **அல்லாஹ்வையும், சத்திய(வேத)த்திலிருந்து இறங்கியதையும் நினைத்து முஃமின்களுக்கு அவர்களுடைய இதயங்கள் பயந்து நடுங்குகின்ற நேரம் வரவில்லையா?** (அல்குர்ஆன்–57:16)

இதனைத் தொடர்ந்து கூறுகின்றான்:–

وَلَا يَكُونُوا كَالَّذِينَ أُوتُوا الْكِتَابَ مِنْ قَبْلُ

**(இந்த ஈமான் கொண்ட விசுவாசிகள் தங்களுக்கு) முன்பிருந்த வேதமுடையோரைப் போன்று ஆகிவிட வேண்டாம்!** எனக்கூறி, இதற்கு காரணத்தையும் விளக்குகிறான்.

فَطَالَ عَلَيْهِمُ الْأَمَدُ فَقَسَتْ قُلُوبُهُمْ

**அவர்களின் மீது (மறதியின்) காலம் நீண்டதாகி விட்டதனால் அவர்களுடைய உள்ளங்கள் கடினமாகிவிட்டன** எனக் கூறுகின்றான்.

எனவே, எப்பொழுது மனிதன் நீண்ட காலம் அல்லாஹுதஆலாவை மறந்த நிலையில் பாவங்களில் மூழ்கி வாழ்ந்து வருவானோ, அவனது உள்ளமெனும் பூமியை அல்லாஹு தஆலா கடினமாக்கி விடுகின்றான் – பின்னர், அவனது உள்ளம் இறுகிவிடுகின்றது. அல்லாஹு தஆலா தன் திருமறையில் இதைத் தெளிவாகக் கூறுகிறான்:

ثُمَّ قَسَتْ قُلُوْبُكُمْ مِنْ بَعْدِ ذٰلِكَ

பொருள்:– **அதற்குப் பின்னரும் உங்களுடைய இதயங்கள் இறுகிக் கடினமாகிவிட்டன.** அதாவது அதன் பின்னர் நாம் அவர்களது உள்ளங்களை கடினமாக்கிவிட்டோம். فَهِيَ كَالْحِجَارَةِ **அவை கற்பாறையைப் போன்றாகி விட்டன,** أَوْ أَشَدُّ قَسْوَةً **அல்லது (அதை விடவும்) அதிகக் கடினமாகி விட்டன.** இதற்குப் பிறகு கூறுகின்றான்:

وَإِنَّ مِنَ الْحِجَارَةِ لَمَا يَتَفَجَّرُ مِنْهُ الْأَنْهَارُ

**(ஏனெனில்,) நிச்சயமாக கற்பாறைகள் சிலவற்றிலிருந்து ஆறுகள் வழிந்தோடுகின்றன.** وَإِنَّ مِنْهَا لَمَا يَشَّقَّقُ فَيَخْرُجُ مِنْهُ الْمَاءُ

**இன்னும் நிச்சயமாக அவற்றிலிருந்து சில (வெடித்துப்) பிளந்து பின்னர் அவற்றிலிருந்து தண்ணீர் வெளிப்படக் கூடியதும் உண்டு;**

وَإِنَّ مِنْهَا لَمَا يَهْبِطُ مِنْ خَشْيَةِ اللّٰهِ

**இன்னும் நிச்சயமாக அவற்றிலிருந்து அல்லாஹ்வின் அச்சத்தினால் சில(மேலிருந்து உருண்டு) கீழே விழக் கூடியவையும் உண்டு;** (அல்குர்ஆன் 2:74)

மனிதனே! உனது உள்ளம் கடினமாகிவிட்ட காரணத்தால் அல்லாஹுதஆலாவின் மகத்துவம் மற்றும் அவனது வல்லமையை

எண்ணி நடுங்க வில்லையெனில், உனது உள்ளம், கடினத் தன்மையில் பாறாங்கல்லைக் காட்டிலும் முன்னால் சென்று விட்டது என்பதை உணர்ந்து கொள்.

## தியானிக்கும் உள்ளமாக எவ்வாறு மாறும்?

எனவே, ஆத்மீக ஆசான்கள் கூறுவதாவது: அல்லாஹு தஆலாவின் திக்ரை செய்து கொண்டே வாருங்கள்! இது உள்ளத்தில் ஒரு பாதையை தாமாகவே ஏற்படுத்திக் கொள்ளும். கல்லின் மீது தண்ணீர் சொட்டு சொட்டாக வடிந்து கொண்டே இருப்பதினால் அதில் துவாரம் ஏற்பட்டு விடுவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். கல்லின் மீது தண்ணீரின் சொட்டுகள், தொடர்ந்து விழுந்த காரணத்தால், தானாக அது கல்லிற்குள் ஒரு சிறு பாதையை ஏற்படுத்திக் கொண்டதைப் போன்று, நாம் அல்லாஹு தஆலாவின் திருப்பெயரை எல்லா நேரமும் உள்ளத்தின் மீது செலுத்திக் கொண்டே இருந்தால் கல்லைப் போன்ற நமது உள்ளத்திலும் இத்திருப்பெயர் தனது வழியை ஏற்படுத்திக் கொள்ளும். இவ்வுள்ளத்தை அலங்கரிப்பதற்காக ஆத்மீக ஆசான்கள், பல திக்ருகளை முறைப்படுத்தி சொல்லித் தருகின்றார்கள். நாம் அவற்றை முறையாக செய்து வந்தால் நமதுள்ளம் அல்லாஹு தஆலாவின் அன்பினால் இலயித்து விடும். பின்னர், நாம் இரவு நேரங்களில் படுக்கையை விட்டு எழுந்திருப்பதில் இன்பம் ஏற்படும். இன்னும், இராக்காலங்களில் எழுந்திருப்பதற்கு கடிகாரங்கள் தேவைப்படாது. மாறாக, படுக்கைகளே நம்மை தூக்கி உட்கார வைத்து விடும். அல்லாஹு தஆலாவின் சில நல்லடியார்களை இரவின் கடைசி பாகத்தில் படுக்கைகளே அவர்களை தூக்கி உட்கார வைத்து விடுகின்றன. இதைத் தான் திருமறையில், பின்வருமாறு அல்லாஹ் குறிப்பிடுகிறான் :

تَتَجَافٰى جُنُوْبُهُمْ عَنِ الْمَضَاجِعِ يَدْعُوْنَ رَبَّهُمْ خَوْفًا وَّطَمَعًا

وَّ مِمَّا رَزَقْنٰهُمْ يُنْفِقُوْنَ

பொருள்: **அவர்களுடைய விலாப்புறங்கள் படுக்கைகளை விட்டும் விலகிக்கொள்ளும்; (வணக்கத்துக்காக, இரவில் தூக்கத்திலிருந்து எழுந்து விடுவார்கள்.) அச்சத்தோடும், ஆதரவோடும் தம் ரப்பை (பிரார்த்தித்து) அழைப்பார்கள். அவர்களுக்கு நாம் கொடுத்தவற்றிலிருந்து (நல்வழியில்)செலவும் செய்வார்கள்.** (அல்குர்ஆன்–32:16)

பின்னர், அல்லாஹுத ஆலா இவ்வகையான அடியார்களின் துஆக்களை அங்கீகரிக்கின்றான். இவர்கள் இவ்வுலகிலும், மறுவுலகிலும் மாபெரும் வெற்றியை தழுவுகின்றார்கள். மேலும், அல்லாஹு தஆலா தன்னிடத்தில் இப்படிப்பட்ட நல்லடியார் களுக்காக தனிப்பட்டதொரு அந்தஸ்தை சித்தப்படுத்தி வைத்துள்ளான்.

## ஒரு மாபெரும் வீரரின் இரவு வணக்கம்

ஹழ்ரத் சலாஹுத்தீன் அய்யூபீ(ரஹ்) அவர்கள் கிறிஸ்துவர்களுக்கு எதிராக சிலுவைப் போர்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்த சமயம், விரோதிகளின் எண்ணிக்கை மிக அதிகமாக இருந்தது. முஸ்லிம்களின் எண்ணிக்கையோ மிகக் குறைவாக இருந்தது. மேலும் ஒரு கப்பற்படை முஸ்லிம்களை எதிர்கொள்ள வந்துகொண்டிருக்கிறது என்ற செய்தியைக் கேட்டு சலாஹுத்தீன் அய்யூபீ (ரஹ்) அவர்கள், மிகவும் கவலையடைந்தார்கள். ஏனெனில், முஸ்லிம் போர்வீரர்களின் எண்ணிக்கையோ ஏற்கெனவே மிகக் குறைவு, அதற்கு மேல் எதிரிகளின் கப்பற்படையும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. இவ்வாறாக முஸ்லிம்களின் மீது பெரும் சோதனையான நேரம் வந்துவிட்டதே என்று சஞ்சலமடைந்த அன்னார் அவர்கள்,

"பைத்துல் முகத்தஸ்" மஸ்ஜிதுக்குச் சென்று இரவு முழுவதும் ருகூஃ, ஸஜ்தா செய்வதில் கழித்தார்கள். மேலும், அல்லாஹு தஆலாவிற்கு முன்பாக அழுவதிலும், மன்றாடுவதிலும் துஆக்கள் கேட்பதிலும் கழித்தார்கள். சுப்ஹு (காலை)த் தொழுகையை நிறைவேற்றிய பின் மஸ்ஜிதுக்கு வெளியில் வந்த போது, ஒரு அல்லாஹ்வின் நல்லடியார் நின்று கொண்டிருந்ததைப் பார்க்கின்றார்கள். அவரது ஒளிமயமான முகம், அவருக்கு அல்லாஹுதஆலா ஒரு ஆன்மீக சக்தியை வழங்கியுள்ளான் என்பதை அடையாளம் காட்டிக் கொண்டிருந்தது. ஹழ்ரத் சலாஹுத்தீன் அய்யூபீ (ரஹ்) அவர்கள், அப்பெரியாரிடம் சென்று, இந்த அவல நிலையைக் கூறி, துஆ செய்யும்படி கோரிக்கை வைப்பதற்காக சலாம் கூறினார்கள். பின்னர், ஹழ்ரத் அவர்களே! எதிரிகளின் கப்பற்படை நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. துஆ செய்யுங்கள்! என வேண்டிக் கொண்டார்கள். அப்பெரியாரும் ஹழ்ரத் சலாஹுத்தீன் அய்யூபீ (ரஹ்)அவர்களின் முகத்தைப் பார்த்தார்கள். பார்த்தவுடன், சலாஹுத்தீன் அய்யூபீ (ரஹ்) அவர்களுக்கு அல்லாஹு தஆலா, அகப்பார்வையையும், உலகக் காரணிகளுக்கு அப்பாலுள்ள நிலைமைகளை பார்த்துக் கொள்ளும் ஆன்மீக சக்தியையும் வழங்கியுள்ளான் என்பதை உணர்ந்து கொண்டார்கள். பின்பு அப்பெரியார் கூறினார்கள்: சலாஹுத்தீன் அவர்களே! தங்களின் இரவின் அழுகையும் கண்ணீரும் எதிரிகளின் கப்பற்படையை கடலில் மூழ்கடித்துவிட்டன.

ஆம், உண்மை. எதிரிகளின் கப்பற்படை வரும் வழியில் மூழ்கிவிட்டது என்ற செய்தி மூன்று தினங்களுக்குப் பிறகு கிடைத்தது. எம்மனிதர் இரவு நேரங்களில் எழுந்து மன்றாடி கேட்கின்றாரோ, அல்லாஹு தஆலா அவருக்கு சாதகமாக உலக கட்டமைப்பை மாற்றி அமைத்து விடுகின்றான். அம்மனிதன் தனது கரங்களை அல்லாஹு தஆலாவிற்கு முன்பாக ஏந்தும் பொழுது,

விதிகளின் முடிவுகளும் விரைவில் செயலாக்கம் பெறுகின்றன. இது சாதாரண விஷயம் அல்ல. மாறாக, மாபெரும் அருட்கொடையாகும். எனவே, நமக்கு இவ்வுள்ளத்தை செம்மைப்படுத்தி சீராக்குவது அவசியமாகும். வாலிபர்கள் வணக்க வழிபாடுகளில் ஒருவருக்கொருவர் முன்னேறுவதில் ஆர்வம் காட்டும் காலமும் இருந்தது. நல்லமல்களில் ஒருவருக்கொருவர் முன்னேறிச் செல்வதை திருக்குர்ஆன் ஊக்குவிக்கிறது.

وَفِي ذٰلِكَ فَلْيَتَنَافَسِ الْمُتَنَافِسُوْنَ

**சுவனத்தின் அருட்பாக்கியங்களான) இவற்றின் மீது ஆர்வம் கொள்பவர்கள், (அவற்றை ஈட்டித் தரும் நல்ல அமல்கள் மீது ஆர்வம் கொள்ளட்டும்.** (அல்குர்ஆன் 83:26)

இன்றோ நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. இரவின் கடைசி பகுதியில் எழுந்து வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டு, தேம்பித் தேம்பி அழுது அல்லாஹு தஆலாவின் முடிவுகளை தமக்கு சாதகமாக்கிக் கொள்ளும் வாலிபர்கள் எங்கு சென்று விட்டார்கள்? இன்று அத்திருமுகங்கள் காணப்படவில்லையே!

ஒரு கவிஞர், கூறுகிறார்.

تیری محفل بھی گئی چاہنے والے بھی گئے　　شب کی آہیں بھی گئیں صبح کے نالے بھی گئے

**உனது [ஆன்மீகம் நிறைந்த] சபையும் சென்று விட்டது. அதனை விரும்புபவர்களும் சென்று விட்டார்கள்.**

**இரவின் குமுறல்களும், காலைப் பொழுதில் எழும் அழுகுரலும் சென்று விட்டது.**

உண்மையில் இன்றைய காலத்தில் அம்முகங்கள் தென்படவில்லை.

மற்றொரு கவிஞர், கூறுகிறார் :

تیرے نگاہ سے دل سینوں میں کانپتے تھے     کھویا گیا ہے تیرا جذب قلندرانہ

உனது [ஆத்மீகப்] பார்வையினால் நெஞ்சங்களுக்குள் இருக்கும் உள்ளம் நடுங்கிக் கொண்டிருந்தன.

[ஆனால், இன்றோ] உனது அந்த ஆன்மீக ஈர்ப்பு காணாமல் போய் விட்டதே!

உண்மையில் இன்று அந்த நிஃமத் அருட்கொடை நம்மிடமிருந்து பறி போய் விட்டது. அதனை மீண்டும் அடைந்து கொள்வது அவசியமாகும். இந்த அவல நிலையைப் பார்த்து ஹழ்ரத் மௌலானா அன்வர் ஷாஹ் கஷ்மீரீ (ரஹ்) அவர்கள், கூறினார்கள்:

منہ دیکھ لیا آئینہ میں پر داغ نہ دیکھا سینے میں     جی ایسا لگایا جینے میں مرنے کو مسلمان بھول گئے

தனது முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். ஆனால், தனது நெஞ்சினுள் இருக்கும் கறையைப் பார்க்கவில்லை.

முஸ்லிம்கள் [உலக வாழ்வில் மோகங் கொண்டு] அதில் தனதுள்ளங்களை இலயித்து, மரணிப்பதை மறந்து விட்டார்கள்.

تکبیر تو اب بھی ہوتی ہے مسجد کی فضا میں اے انور

جس ضرب سے دل ہل جاتے تھے وہ ضرب لگانا بھول گئے

ஓ அன்வரே! பள்ளி வளாகத்தில் பாங்கொலியில் இப்பொழுதும் தக்பீர் ஒலிக்கின்றது.

ஆனால், அதை எவ்வாறு கூறினால், உள்ளங்கள் நடுநடுங்கிடுமோ அவ்வாறு கூறுவதை முஸ்லிம்கள் மறந்து விட்டார்கள்.

நாம் அல்லாஹு தஆலாவின் திரு நாமத்தை முழு மனதுடன் இலயிக்க வைத்து கூறி வந்தால், உள்ளங்கள்

விழிப்படையும். இதனால் நமதுள்ளங்கள் அல்லாஹு தஆலாவின் அன்பினால் நிரம்பிவிடும். உள்ளங்கள் எப்பொழுது அவனது திக்ரின் ஒளியால் நிரம்புமோ அப்பொழுதுதான் நமக்கு வணக்க வழிபாடுகளில் இன்பம் ஏற்படும். ஆதலால், நாம் இவ்வுள்ளத்தை சீர்திருத்தி அலங்கரித்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது தான் நாம் அல்லாஹு தஆலாவின் சமூகத்தை சென்றடையும் சமயம், அவன் நமதுள்ளத்தின் மீது தனது அன்பான, கருணையான பார்வையை செலுத்துவான். இதற்கு மாறாக, மலஜலம் நிறைந்துள்ள ஓர் அறையை எவரும் ஏறெடுத்துப் பார்க்க விரும்ப மாட்டார்களோ அதே போன்று இவ்வுள்ளம் உலக பேராசைகளின் துர்நாற்றத்தினால் நிறைந்திருந்தால், அல்லாஹு தஆலா அதனை அன்பினால் பார்ப்பதற்கு பதிலாக அதை ஏறெடுத்தும் பார்க்க விரும்பமாட்டான். எனவே, நாம் நம்முடைய உள்ளத்தை செம்மைப் படுத்தி, சீராக்க அல்லாஹ் அருள் புரிவானாக! அவ்வாறு நாம் நமதுள்ளத்தை சீர்படுத்தி விடுவோமேயானால், நாம் புரியும் நற்செயல்களில் உண்மையான இன்பம் கிடைக்க ஆரம்பித்து விடும். பின்னர், இராக்காலங்களில் விழித்திருந்து வணக்கங்கள் புரிவது இலேசாகிவிடும். மற்றவர்கள் நமக்கு நினைவூட்ட வேண்டிய அவசியம் ஏற்படாது.

இன்றைய காலத்தில் சில உலமாப் பெருமக்கள், ‘‘நாம்தாம் நாள் முழுவதும் தீனுடைய கல்வியைக் கற்பது, பிறருக்கு கற்றுக் கொடுப்பத்தில் மூழ்கியிருக்கின்றோமே!. எனவே, இதன் மூலம் தஹஜ்ஜுத் தொழுபவர்களின் நன்மைகள் நமக்குக் கிடைத்து விடும்’’ என்று தமது உள்ளத்திற்கு சமாதானம் கூறிக் கொள்கின்றனர். அப்படியானால், கண்ணியத்திற்குரிய ஸஹாபாப் பெருமக்கள், என்ன நாள் முழுவதும் காய்கறி வியாபாரமா செய்து வந்தார்கள்? அவர்கள் தீனுடைய பணிகளில் தானே நாள்

முழுவதும் ஈடுபட்டு வந்தார்கள்!? இருப்பினும் இரவு நேரங்களை அவர்கள் எவ்வாறு கழித்து வந்தார்கள்? உண்மையில் அவர்கள் நாள் முழுவதும் தீனுடைய பணிகளில் ஈடுபட்டிருந்தும், இரவில் முஸல்லாவின் மீது நின்று வணக்கவழிபாட்டில் திளைத்தவர்களாக இருந்தார்கள் என்பதை நாம் பார்க்கும் பொழுது, நாமும் அவர்களைப் பின்பற்றி நடக்க வேண்டும். அவர்கள் எப்பாதையில் நடந்து சென்றார்களோ நாமும் அதே பாதையைப் பின்பற்றி நடந்தால் அல்லாஹு தஆலாவின் நட்பு நமக்கு கிடைக்கும். நாம் பாதையை மாற்றி விட்டால், சென்றடையும் இலக்கும் மாறிவிடும்.

## தஹஜ்ஜுத்தின் பாக்கியம் எவ்வாறு கிடைக்கும்?

ஹழ்ரத் ஹஸன் பஸரீ (ரஹ்)அவர்களின் சமூகத்தில் ஒருவர் வந்து, "ஹழ்ரத்"அவர்களே! எனக்கு தஹஜ்ஜுத் தொழும் பாக்கியம் கிடைப்பதில்லை. அதைப் பெறும் வழியை காட்டித் தாருங்கள்" என வேண்டிக் கொண்டார். அதற்கு அன்னார், "நண்பரே! நீர் பகலின் அமல்களை சரி செய்து கொள். அல்லாஹு தஆலா இரவின் அமல்களை செய்வதற்கான பாக்கியத்தை வழங்குவான்" என பதிலளித்தார்கள். எனவே, நாம் பகலில் செய்யக்கூடிய அமல்களை அதிக கவனத்துடன் சீர்படுத்த வேண்டும். குறிப்பாக அல்லாஹ், அல்லாஹ் எனும் திக்ரை செய்து வரவேண்டும். இதனால் உள்ளத்தில் அல்லாஹு தஆலாவின் ஒளி ஏற்பட ஆரம்பிக்கும். பின்னர் இவ்வுள்ளம், இரவின் கடைசிப் பகுதியில் தூங்க விடாது. மாறாக, நம்மை விழிப்படையச் செய்யும். இன்னும் சொல்லப்போனால், அல்லாஹ்வின் சில நல்லடியார்களுக்கு பகல் நேரங்களின் வணக்க வழிபாட்டில் கிடைக்காத பேரின்பம், இரவு நேர வணக்கங்களில் கிடைத்து வந்தது.

ஹழ்ரத் மௌலானா ஷஃரானி (ரஹ்) அவர்கள் கூறுவதாவது: மணமகன் முதல் இரவை ஆவலுடன் எதிர்ப்பார்ப்பதைப் போன்று, முற்காலத்தின் நல்லடியார்கள், அல்லாஹ்விடம் சம்பாஷணை செய்ய இரவு வருவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

நமது ஆத்மீகப் பெரியார்கள், جودم غافل وہ دم کافر

எந்த மூச்சு மறதியில் கழிந்ததோ அந்த மூச்சு மறுப்பதில் கழிந்தது எனக் கூறுவார்கள்.

ஹழ்ரத் மஜ்தூப் (ரஹ்) அவர்கள், ஒரு முறை ஓரிடத்திற்கு சென்று கொண்டிருக்கும் பொழுது அறிமுகமான ஒரு நபர், அன்னாரிடம் "ஹழ்ரத் அவர்களே! தாங்கள் எவ்வாறு இருக்கிறீர்கள்" என நலம் விசாரித்தார். அதற்கு ஹழ்ரத் அவர்கள்,

پنشن ہوگئی ہے کیا بات ہے اپنی      اب دن بھی ہے اپنا اور رات ہے اپنی

اب اور ہی کچھ ہے میرے دن رات کا عالم      ہر وقت ہی رہتا ہے ملاقات کا عالم

இப்பொழுது எனக்கு ஓய்வூதியம் கிடைத்து விட்டது. இதன் மகிழ்ச்சியை எவ்வாறு கூறுவது!.

இப்பொழுது பகலும் இரவும் எனக்குரியதாகிவிட்டது.

இப்போது எனது இரவு, பகலின் நிலையே முற்றிலுமாக மாறிவிட்டது.

சதா நேரமும் [அல்லாஹு தஆலாவை] சந்திக்கும் பேராவலில் கழிந்து கொண்டிருக்கிறது.

அல்லாஹு தஆலா நமக்கும் இவ்வகையான பேரின்ப நிலையை வழங்குவானாக! ஆமீன்.

## அந்நியப் பெண்களைப் பார்ப்பதினால் ஏற்படும் விபரீதங்களும் அதை விட்டு தவிர்ந்து கொள்ளும் வழிமுறைகளும்.

( நபியே! ) முஃமினான ஆண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறைவிடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:30)

( நபியே! ) முஃமினான பெண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறைவிடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:31)

மனிதன் மானக்கேடான காரியங்களில் மூழ்கிவிட மூலக் காரணம், அவன் தன்னுடைய பார்வையை கடிவாளமிட்டு கட்டுப்படுத்தாததேயாகும். எனவேதான் கெட்ட பார்வையை உம்முல்கபாயிஸ் – மானக்கேடான பாவங்களின் தாய் என்று மார்க்க விற்பன்னர்கள் கருதுகிறார்கள்.

கண்கள், ஃபித்னா - அசம்பாவிதங்கள் பொங்கிவரும் ஊற்றாகஇருக்கின்றன. இந்நிலையில் பெண்கள் நிர்வாணமாக சுற்றித் திரிவது இந்த ஃபித்னாவை மென்மேலும் அதிகப்படுத்திவிடுகிறது.

ஹஸ்ரத் ஷைகுல் ஹதீஸ் ஜகரிய்யா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் : கெட்ட பார்வை மிக மோசமான வியாதியாகும். ஆரம்பத்தில் சிலருக்கு திக்ரு செய்வதில் அதிக ஆர்வம் இருக்கும். ஆனால் இந்த கெட்ட பார்வை அந்த ஆர்வத்தையும் வணக்க வழிபாடுகளில் ஏற்படும் இன்பத்தையும் அழித்துவிடுகிறது. பிறகு சிறிது சிறிதாக அவர் நல்ல அமல்கள் செய்வதை முழுமையாக விட்டுவிடுகிறார்.(ஆப்பீ(த்)தி பாகம்:2,பக்கம்:418)

ஷைகு வாஸிதி (ரஹ்) அவர்கள் அடிக்கடி கூறுவார்கள்; அல்லாஹ் ஒரு மனிதனை கேவலப்படுத்த நாடிவிட்டால் அழகிய முகங்களை பார்க்கும் பழக்கத்தை அவனுக்கு ஏற்படுத்திவிடுவான்.

சீவி சிங்காரித்து கவர்ச்சியாக வலம்வரும் பெண்களும் அவர்களை இச்சையுடன் பார்க்கும் ஆண்களும் அல்லாஹ்வின் சாபத்திற்குரியவர்களாகும். நெருப்புக் குண்டம் சிறிய தீப்பொறியினால் உருவாகுவதைப் போல் விபரீத குற்றங்கள் கெட்ட பார்வையின் மூலம் உருவாகின்றன. எனவே வெட்கத் தலங்களை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவது மிக அவசியமாகும்.

நாம் நம்முடைய கண்களுக்கு திரையிடாவிட்டால் நம் உள்ளங்களின் மீது திரை போடப்படும். எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள்!

தீய பார்வையை விட்டு விலகியிருக்க சில வழி முறைகளை முரீதீன்களுக்கு ஷைகுமார்கள் குறிப்பிடுகிறார்கள் :

1. பாதையில் செல்லும் போது பார்வையை மிகவும் தாழ்த்திக்கொள்ள வேண்டும். அருகில் செல்பவர்கள் ஆணா பெண்ணா என்பதைக் கூட பாதங்களை வைத்து அனுமானித்துக் கொள்ள வேண்டும்.
2. சூப்பர் மார்கெட் மற்றும் டிக்கெட் கவுண்டர் போன்றவற்றில் ஆண்கள் இருக்குமிடத்தை தேர்ந்தெடுக்க வேண்டும். இதனால் பெண்களிடம் பேசும் சந்தர்ப்பம் தவிர்க்கப்படுகிறிது.
3. அந்நியப் பெண்களிடம் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் சண்டையிட்டுக் கொண்ட இரு நபர்கள் பேசுவதைப் போல் முகத்தை பார்க்காமல் பேசுங்கள்.
4. சாலை ஓரங்களில் ஒட்டப்பட்டுள்ள சினிமா போஸ்டர்களை பார்க்காதீர்கள்!
5. வாகனத்தில் செல்லும் போது அருகில் செல்லும் வாகனத்தில் அமர்ந்துள்ள பெண்களின் பக்கம் கவனத்தை செலுத்தாதீர்கள்!

6. தம் வீடாக இருந்தாலும் அந்நியப் பெண்கள் உள்ளே இருக்கும் போது அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ள வேண்டும் படி முன்னெச்சரிக்கை செய்த பின் நுழைய வேண்டும்.

7. அடுத்தவர் வீட்டிற்கு சென்றால் வாசலுக்கு நேராக நிற்கக்கூடாது.

8. ஆண்களும் பெண்களும் கலந்திருக்கும் கூட்டங்களுக்கு அறவே செல்லாதீர்கள்! பெண்கள் நடமாட்டம் இல்லாத பாதையில் செல்லுங்கள்!

9. சுற்றுலாத் தலங்களுக்கு செல்லாதீர்கள்! அப்படி செல்வதாகஇருந்தால் மற்றவர்கள் செல்லாத நாளை தேர்ந்தெடுத்து அந்நாளில் செல்லுங்கள்.

10. பஸ், ரயில், விமானம் போன்றவற்றில் பிரயாணம் செய்யும்போது மார்க்க நூல்களை எடுத்துச் சென்று அதை படித்தபடி நேரத்தை கழியுங்கள்! இல்லையெனில் பிரயாணம் செய்யும் பெண்கள் மீது பார்வை படும்.

11. பெண்களின் படம் அல்லது டி.வி. பொருத்தப்பட்டுள்ள பஸ், ரயில், நிலையங்களிலும் தங்கும் விடுதிகளிலும் அலுவலங்களிலும் அந்த திசையில் முதுகை காண்பித்து அமருங்கள்!

12. தேவையின்றி இன்டர்நெட் - இணைய தளத்தை பயன்படுத்தாதீர்கள்!

13. மாற்று மதத்தார் அதிகம் வசிக்கும் பகுதிகளுக்கு சென்றால் யாருடைய முகத்தையும் பார்க்காதீர்கள்.! ஏனெனில் கோடை காலங்களில் அவர்கள் தங்கள் மேனிகளில் அதிகமான பகுதிகளை திறந்தே வைக்கின்றனர். குளிர் காலங்களில் ஆடை அணிந்திருந்தாலும் ஆண்கள், பெண்களுக்கு மத்தியில் வித்தியாசம் இல்லாத அளவிற்கு பெண்கள் ஆண்களைப் போன்று முடிவெட்டிக் கொண்டு கோட் அணிந்து டைய்மாட்டிக்

கொண்டு வலம் வருகின்றார்கள். இந்த முஸீபத்திலிருந்து தப்பித்து நம் ஈமானை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவதைத் தவிர வேறு வழியில்லை.

14. வீட்டில் தனியாக ஒரு போதும் இருக்காதீர்கள்! எந்தவேலையுமின்றி சும்மாவும் இருக்காதீர்கள்!

15. பெண்களின் ஸ்கூல் மற்றும் காலேஜ் இருக்கும் தெருவில் செல்வதை விட்டு விடுங்கள்!

16. திருமணமாகிவிட்டால் தன் மனைவியை சந்தோஷமாக வையுங்கள்!

17. கஃபாவை தவாஃப் செய்யும் போது பாதங்களை பார்க்கும் வண்ணம் பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள்! கண்டிப்பாக பார்வையை உயர்த்தாதீர்கள்!

18. அந்நியப் பெண்களை பார்ப்பதினால் கிடைக்கும் தண்டனைப் பற்றி அடிக்கடி சிந்தியுங்கள்! அந்நியப் பெண்களை பார்த்தவனின் கண்களில் கண்ணாடியை உருக்கி மலக்குமார்கள் ஊற்றுவார்கள். சூடாக்கப்பட்ட கூர்மையான கம்பிகளை கண்களில் குத்துவார்கள் என்றும் சில கிதாபுகளில் எழுதப்பட்டுள்ளது.

19. அந்நியப் பெண்களை ஒரு முறை பார்த்துவிட்டால் இருபது ரகஅத் தொழுவேன் என்ற தண்டனையை நடைமுறைப்படுத்துங்கள்! இன்ஷா அல்லாஹ் சில தினங்களில் பார்வையை தாழ்த்த ஆரம்பித்துவிடுவீர்கள்.

20. ஒவ்வொரு மாதமும் 13,14,15 ஆகிய தினங்களிலும் திங்கள் மற்றும் வியாழக்கிழமைகளிலும் நோன்பு நோற்றுவாருங்கள்! இந்த நோன்புகள் நோற்றும் பார்வையை கட்டுப்படுத்த முடியாவிட்டால் ஹள்ரத் தாவூத்(அலை) அவர்களைப் போல் ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு வையுங்கள்!

21. கீழ் காணும் தஸ்பீஹை காலையிலும் மாலையிலும் 100, 100 முறை ஓதுவதை வழமையாக்கிக் கொள்ளுங்கள்!

لَا مَرْغُوْبِيْ اِلَّا الله

لَا مَطْلُوْبِيْ اِلَّا الله

لَا مَحْبُوْبِيْ اِلَّا الله

لَآ اِلٰــــهَ اِلَّا اللهُ

எனக்கு விருப்பமானவன் அல்லாஹ் தான்.
நான் தேடுவது அல்லாஹ்வைத் தான்.
எனக்கு பிரியமானவன் அல்லாஹ் தான்.
வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

22. தினமும் தஹஜ்ஜுத் தொழுகைக்காக எழுந்து அல்லாஹ்விடம், யா அல்லாஹ்! பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது எனக்கு சிரமமாக இருக்கிறது. ஆனால் பாவங்களில் ஈடுபடாமல் என்னை பாதுகாப்பது உனக்கு லேசான காரியமாகும். எனவே என் இறைவா! என் உள்ளத்தை தூய்மைப்படுத்தி விடுவாயாக! என் பார்வையைபரிசுத்தப்படுத்துவாயாக! என்று துஆ செய்யுங்கள்!

கெட்ட பார்வையை விட்டு விலகி தம் பார்வையை பாதுகாத்துக் கொள்ளும் மனிதருக்கு மறுமையில் இரு வெகுமதிகள் வழங்கப்படும்.

1. பார்வையை தாழ்த்திய ஒவ்வொரு முறைக்கும் அல்லாஹ்வை பார்க்கும் பாக்கியம் கிடைக்கும். 2. மறுமையில் அழுவதை விட்டு அந்த கண் பாதுகாக்கப்படும்.

## ஹள்ரத் பீர் ஸாஹிப் அவர்களின் சீரிய உரைகளில் எமது வெளியீடுகள்

1. بدنظری کے نقصانات (اردو)

(தமிழில், تمل)

2. அந்நிய பெண்களை பார்பதினால் ஏற்படும் விபரீதங்கள்

(ஆங்கிலத்தில், انگریزی)

3. SIN OF THE EYE

(இச்சிறு நூல் தெலுங்கு மொழியிலும் கிடைக்கும்)

4. معمولات یومیہ (نقشبندیہ)

(தமிழில், تمل)

5. அன்றாட அமல்கள் (நக்ஷ்பந்தீ)

6. گناہوں کے نقصانات (تمل)

பாவத்தின் பாதிப்புகள்

7. رب غفار کا گنہگاروں سے پیار (تمل)

பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

8. گناہ سے کیسے بچیں؟ (تمل)

பாவத்தை விட்டு பாதுகாத்து கொள்வது எப்படி?

9. شوہر کی دس خطرناک غلطیاں شوہر کیلیے دس سنہری اصول

கணவன் தவிர்க்க வேண்டிய அபாயகரமான 10 தவறுகள்

கணவனிடம் இருக்க வேண்டிய 10 பண்புகள்

Publisher
MUFTI SHAKEEL AHMED NAQSHBANDI
VELLORE - 632004, Tamil Nadu, India.
Cell : +91 - 94444 53232
E-mail : shakeel.naqshbandi@yahoo.com